**சைவசித்தாந்த வினா விடை**

**சைவசித்தாந்த கலாநிதி**
**சித்தாந்தரத்தினம் க. கணேசலிங்கம்**
*ஆதீனப்புலவர், இலண்டன் மெய்கண்டார் ஆதீனம்*
*கவிஞர், பொறியியலாளர்*
*(குப்பிழான், யாழ்ப்பாணம்)*

முதல்பதிப்பு : ஜுலை 2005
உரிமை : ஆசிரியருக்கு
பக்கங்கள் : 120

வெளியீடு : கலாநிதி க. கணேசலிங்கம்
திருவருள் வெளியீடு
54-5/4, சென். லோறென்ஸ் வீதி
கொழும்பு-06.

அச்சிட்டோர் : மாசறு அச்சகம்,
பு.எண்.45, மசூதி தெரு,
சேப்பாக்கம், சென்னை-600 005.

**Saiva Shiddhanta Vina Vidai**
by
**Dr. K. Ganesalingam** *B.Sc. (Eng.)*
*C.Eng., M.I.E.E.(Lond.), M.I.E.(Cey.)*
54-5/4, St. Lawrence Road,
Colombo-06, Sri Lanka

ISBN 955-99208-04

Rs.150.00
$ 5.00 (other countries)

# காணிக்கை

சைவசித் தாந்தம் தெளிந்தபே ரறிஞன்
சைவத்தில் புகுந்த சிறுநெறி களைந்து
சிவநெறி யான பெருநெறி பேணிடல்
சிந்தைசொல் செயலில் கடமையாய்க் கொண்டவன்
புகழினைப் பொருளைக் கருதிடாப் பண்பும்
எளிமையும் சைவத் தமிழினிற் புலமையும்
கொண்டவன் நூல்பல எழுதிய சான்றோன்
சிவனையே போற்றும் சைவன் ஏழாலைப்
**பண்டிதர் கலாநிதி கந்தையா** அவர்கள்
பண்பும் எளிமையும் கொண்ட பெருமகன்
**சைவசித் தாந்த வினாவிடை** நூலைநான்
எழுதிட ஆக்கமும் ஊக்கமும் தந்து
வாழ்த்துரை வழங்கினான் எழுதமுன் சிவபதப்
பேற்றினைக் கொண்டான் பெருநிலை கண்டான்
சித்தாந் தத்தின் நுட்பங்கள் விளக்கிச்
சிறியவன் எனக்கதன் ஆழமும் காட்டி
ஆர்வம் வளர்ந்திடச் செய்தநல் ஆசான்
தத்துவ உலகில் தடம்பதித் திட்டஇச்
சைவசித் தாந்த மேதையின்
கழலிணைக் கெனது காணிக்கை இந்நூல்.

**- க. கணேசலிங்கம்**

# பொருளடக்கம்






நாள்:15.07.2005

*"நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க*
*கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க."*

## அருள் வாழ்த்துரை

*அப்பனை நந்தியை ஆரா அமுதினை*
*ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை*
*எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்*
*அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே.* **–திருமந்திரம்**

ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் முழுமுதற் பரம்பொருளாம் சிவபெருமானால் வேதசிவாகமங்கள் மூலம் வகுத்தருளப் பெற்ற மெய்ந்நெறி சைவப் பெருநெறியாகும். அதன் கொள்கை விளக்கமாக அமைந்திருக்கும் பகுதி சைவசித்தாந்தம் ஆகும்.

வேதாந்தத்தெளிவு என்றும் ஆகமாந்தம் என்றும் போற்றப்பெறும் சைவசித்தாந்தம், யாவரும் கற்று உய்ய வேண்டியதாக இருப்பினும், அதனை விளக்கும் நூல்கள் வடமொழியிலும், செய்யுள் நடையில் அமைந்திருக்கும் தமிழ்

நூல்களிலும் உள்ளன. எனவே தொடக்க நிலையில் உள்ளோர் கற்றுப்பயன்பெறுதல் அரிதாக உள்ளது.

இதனைக் கருத்தில் கொண்டு யாவரும் சித்தாந்த அடிப்படைகளை உணர்ந்து, மெய்கண்ட சாத்திரங்களைக் கற்பதில் ஊக்கம் கொள்ள வேண்டும் என்ற பெருநோக்கில் சிவத்திருவாளர் கலாநிதி க. கணேசலிங்கம் அவர்கள் சைவசித்தாந்த வினா விடை என்ற நூலினை எழுதியிருப்பது கண்டு மகிழ்ச்சி அடைகிறோம்.

எளிய நடையில் அமைந்துள்ள வினா-விடைகள் முப்பொருள் இயல்புகளைத் தெளிவுற விளக்குகின்றன. சில விரிவான விளக்கங்கள் சைவம் கற்றவர்கள் மேலும் தமது அறிவைப் பெருக்கிக் கொள்ள உதவும் முகமாக விளங்குகின்றன. கொள்கை விளக்கம் மட்டுமல்லாது சிவாலயம், சிவமூர்த்தங்கள் பற்றிய விளக்கமும் தந்து, வழிபாட்டு நெறியினையும் வலியுறுத்தி இருப்பது சித்தாந்தம் கற்றதனால் பெறத்தக்க பயனுக்கு வழிகாட்டியாய் இருக்கின்றது.

காலத்தின் தேவை உணர்ந்து சிறந்ததோர் சித்தாந்த நூலினை உருவாக்கி இருக்கும் சிவத்திரு க. கணேசலிங்கம் அவர்களுக்கும், கற்றுப்பயன் பெறும் அன்பர்களுக்கும், வெளியீட்டாளர்களுக்கும் இருமை வளங்களும், சிவபத்தி சிவஞானங்களும் சித்திக்க நமது வழிபடு கடவுளாகிய ***அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன்*** திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்

அன்பே சிவம் Anbe sivam

**இலண்டன் மெய்கண்டார் ஆதீனம்**

LONDON MEIKANDAAR AADHEENAM - U.K. REGD CHARITY TRUST

**உலக சைவப் பேரவை**

**WORLD SAIVA COUNCIL**

President & Chief Executive: Sivath Thiru Yogananda Adikal

**INTERNATIONAL HEADQUARTERS**

C/o. London Meikandar Adheenam, 72, Edward Road, London E17 6HZ, U.K.

Tel:020-8531-6435 Fax:1268 - 561805, E-mail:sivayanama@AOL.com Web Site:www.saivismonline.org

# வாழ்த்துரை

## *போற்றி ஓம் நமசிவாய*

இன்று பொதுவாகவே சமயம் என்பது பெரும்பாலும் சடங்குகளின் தொகுப்பாக இருக்கிறது. அதன் வழி எல்லாவற்றையும் பெற்று விடலாம் என்று நம்புகின்ற காலம் இது. ஆனால் வளர்ந்து வருகின்ற இளைய தலை முறையினர் பல்வேறுபட்ட கேள்விகளை எழுப்பி விடைகாண விரும்புகின்றனர்.

இன்றைய இச்சூழ்நிலையில் சைவசித்தாந்த அடிப் படைக் கொள்கைகளை வினா விடை வடிவில் நூலாகக் கொண்டு வருகின்ற சித்தாந்தரத்தினம் கலாநிதி க. கணேசலிங்கம் அவர்களின் பணி பாராட்டுதலுக்குரியது; காலத்திற்கு ஏற்றது. வினாவிடை வடிவில் சைவ சமயத்தை

இலகுவில் புரிந்து கொள்ளச் செய்தவர்களில் நாவலர் பெருமான் வழிகட்டியாக விளங்கியவர்.

ஈழத்தில் நாவலருக்குப் பின் தொடர்ந்த சைவ சித்தாந்தச் சிந்தனையாளர்களில் இன்று சித்தாந்த ரத்தினம் கலாநிதி க. கணேசலிங்கம் அவர்களும் இடம் பெறுகின்றார்கள். இப்பெருமகனார் சைவம், சித்தாந்தம் தொடர்பாகப் பல கட்டுரைகளும் நூல்களும் படைத்துள்ளார்கள். அந்த வரிசையில் வெளிவரும் இந்நூலும் முக்கிய இடத்தைப் பெறுகிறது.

சித்தாந்தரத்தினம் கலாநிதி க. கணேசலிங்கம் அவர்கள் இலண்டன் மெய்கண்டார் ஆதீனத்தின் புலவராகவும் விளங்குகின்றார்கள். ஆதீனத்தின் தலைவராக விளங்கிய தவத்திரு சிவநந்தி அடிகளாரின் விருப்பத்தையும் நிறைவு செய்யும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

சைவப் பேரன்பராகிய கணேசலிங்கம் அவர்களின் பணி சிறப்புடன் தொடர எல்லாம் வல்ல தில்லை நடராசப் பெருமான் திருவடிகளை வணங்கி வாழ்த்தி அமைகிறோம்.

***தென்னா டுடைய சிவனே போற்றி***
***எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி.***

இவ்வண்ணம்
இறைபணியில் பணிவுள்ள ஊழியன்
**யோகானந்த அடிகள்**
(பி.எசு. பற்குணராசா)

# அறிமுகம்

## *சைவசித்தாந்த வினா விடை*

பண்டிதர் கலாநிதி மு. கந்தையா
ஏழாலை, யாழ்ப்பாணம்

கடவுள் எவ்வுயிர்க்கும் இயல்பானவர். '*ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ*' என்பது திருவாசகம். அதன் அடிப்படையில் மக்கள் ஒவ்வொரு வரும் தமது அகச்சூழ்நிலை புறச்சூழ்நிலைகளுக்கு இசைவான ஏதேனும் ஒரு விதத்தில் கடவுளை வழிபடும் வழிபாட்டு நிலை சகலருக்கும் பொதுநிலை. ஆனால், சைவமரபு இப்பொதுநிலை அளவில் திருப்தி காண்பதில்லை.

காலங்கண்ட பழம்பெருஞ்சமயமாகிய சைவத்தில் மற்றெச் சமயங்களுக்கும் இல்லாத அளவுக்குக் கடவுள் வழிபாட்டுப் பண்பும், பயனும் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளன.

வாழ்ந்தே ஆகவேண்டிய தவிர்க்க முடியாத நியதிக்கு உட்பட்டிருக்கும் நமது வாழ்க்கை பதி, பசு, பாசம் என்ற மூலங்கள் மூன்றின் அன்னியோன்னியச் சேர்க்கையால் ஆனது. இவற்றில் பதிக்குப் பாசத்தால் ஆவதொன்றில்லை. பாசத்துக்குப் பதியைத் தொழுது பயன் பெற்றுக் கொள்ளுமாறில்லை. மூன்றாவதாகிய பசுவே பதியின்

---

*(பண்டிதர் அவர்கள் அமரராகும் முன் அறிமுகம் என்ற பெயரில் இவ்வாழ்த்துரையை வழங்கி இந்நூலை எழுதும்படி பணித்தார்.)*

இடையறாத உபகாரத்தால் தனது வினைப் பயனாகப் பிறந்து இறந்து பெறும் நீண்ட கால அனுபவத்தில் பாசத்தடையில் இருந்து நீங்கிப் பதியினைச் சார்ந்து விடுதலை பெறுதற்காம் நிலையில் உள்ளது. உண்மை அறிவுநூற்கருத்துக்களும் சான்றோர் வரலாற்று உண்மைகளும் பிரதிபலிக்கின்ற இந்த உண்மை உணர்வு நிலைக்குப் பெயர் ஞானம். இந்த ஞானமே சைவ வழிபாட்டின் தனித்துவப் பண்பாகும்.

சைவ வழிபாட்டிற்கு ஆதார நூலாகவும் பிரமாண நூலாகவும் வழக்கில் உள்ளது சிவாகமம். சிவாகமங்கள் இந்த ஞானம் பற்றிய விளக்கத்தை முதலில் வைத்தே கடவுள் வழிபாட்டு விதிமுறைகளைத் தெரிவிக்கும். சைவ வழிபாட்டு நிலையமான ஆலயமும் ஞானி ஒருவரின் உடல் அமைப்பின் மாதிரியிலேயே உருவமைக்கப்படும். அங்கு நிகழும் கிரியைகள் சகலமும் இந்த ஞான விளக்கப் பின்னணியிலேயே அமையும். விழுந்து கும்பிடுதல் முதல் பூசை செய்தல் இறுதியாக உள்ள வழிபாட்டு நிலமைகள் எல்லாம் இந்த ஞானப் பின்னணியிலேயே அமையும்.

சைவ விளக்கத்துக்கு அகல் விளக்குகளாக உள்ள சைவத் திருமுறைகள் முழுவதும் இந்தச் சைவ ஞான விழுமியங்களையே உட்பொருளாகக் கொண்டுள்ளன. '*என் உள்ளம் கவர் கள்வன்*', என்ற சம்பந்த சுவாமிகள் தேவாரத் திருவார்த்தை பசுவினிடத்தில் அதையறியாமலே பதி புகுந்திருந்து இயலும் வகையால் எல்லாம் பசுவை வசீகரிக்கிறது, என்ற சைவஞான உண்மையை உட்பொருளாகக் கொண்டிருக்கிறது. இவ்வாறே, '*அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே*' என்ற



சுந்தரமூர்த்திசுவாமிகளின் தேவாரத் திருவார்த்தை பசு அனாதியாகவே பதிக்கு அடிமை என்ற சைவ ஞான உண்மையையும், '*எல்லா உலகமும் ஆனாய் நீயே*' என்ற திருநாவுக்கரசுசுவாமிகளின் தேவராத் திருவார்த்தை பதி எங்கும் வியாபகம் என்னும் உண்மையையும், '*சேயாய் நணியானே*' என்ற திருவாசகத் திருவார்த்தை, பாச பந்தம் நீங்காதவற்கு எட்டாத் தூரத்தனாயும் அது நீங்கி ஞானம் பெற்றவற்கு அதி அண்மையனாயும் உள்ளான், என்ற உண்மையையும் உள்ளுறு பொருளாகக் கொண்டுள்ளன. இவை சில உதாரணங்கள். சைவத் திருமுறைச் செய்யுள்கள் என உள்ள 18,290-லும் இவ்வகை உண்மைகளே இயல்பாக உள்ளன.

இவ்வகையில் பிரபல்யம் பெற்றிருக்கும் சைவ ஞான உண்மைகள் முழுவதையும் வரன் முறைப்படி வகுத்துத் தர்க்க ரீதியாக விளக்கும் தத்துவக்கலை சைவ சித்தாந்தம் எனப்படும்.

இங்கு மேற்கண்ட விளக்கப்பிரகாரம் இச்சைவ சித்தாந்த விளக்கம் இல்லாத நிலையில் இடம் பெறும் ஆலய வழிபாடோ ஆலய நிர்வாகமோ, ஆலயக் கிரியைகளோ உரிய பலன் தரும் என்பதற்கில்லை.

இவ்விதம் சாமானிய வழிபாட்டிற்கே இன்றியமையா திருக்கும் சைவ சித்தாந்த அறிவு சைவ சமூகத்திற்கு அத்தியாவசியமானது என்பதற்கு ஐயமில்லை. இவ்வறிவு கற்றோருக்குப் போல மற்றோருக்கும் விளங்குதற்கேற்ற இலகு தரமான வினாவிடை அமைப்பில் அமையுமாறு இயற்றி இப்போது வெளியிடுகின்றார் திருவாவடுதுறை ஆதீனத்துச் சைவசித்தாந்த ஞான பரம்பரையில் சைவ

சித்தாந்தம் தேர்ந்து தரமான சைவ சித்தாந்த அறிஞராகத் திகழும் அன்பர் சித்தாந்தரத்தினம் சிவத்திரு கணேசலிங்கம் அவர்கள். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் சைவ சமய உண்மைகள் எல்லாவற்றுக்கும் இலகுவிற் புலப்பட வைக்கும் ஊடகமாக வினாவிடை முறையைக் கையாண்டு '*சைவ வினா விடை*'கள் வெளியிட்டுள்ளார். அதே முறையைக் கையாண்டு சைவசித்தாந்த உண்மைகளை எளிய முறையில் வெளியிடும் கணேசலிங்கம் அவர்கள் மேற்கொள்ளும் இப்பணி காலத்தின் தேவையை ஒட்டிய அரும் பெரும் பணியாகும்.

இவ்வினா விடை மூலம் சைவசாஸ்திர அறிவுடன் அதன் பயனாக விளையும் சைவத்திருமுறைப்பயன் நுகர்வும் சைவாலய வழிபாட்டுச் செழிப்பும் மேலோங்கிச் சிறப்புற வாழ்த்துகின்றோம்.

ஏழாலை

**மு. கந்தையா**

# முன்னுரை

**சைவசித்தாந்த வினா விடை** என்ற இந்நூல் சைவத்தின் தத்துவத்தை அறியாதவருக்கும் ஓரளவு அறிந்தவருக்கும் பயன்படத் தக்கவாறு எழுதப் பட்டுள்ளது. வினா விடை மூலம் சைவசித்தாந்த விளக்கம் அளிக்கப் பட்டுள்ளது.

எனது An Outline of Saivism என்ற ஆங்கில நூல் 2001-ல் வெளிவந்தபின் இலண்டன் மெய்கண்டார் ஆதீன முதல்வர் சுவாமி சிவநந்தி அடிகளார் சைவசித்தாந்த விளக்கம் அளிக்கும் ஒரு ஆங்கில நூலையும் எழுதும்படி பணித்தார். இந்நூல் சைவசித்தாந்த அடிப்படைகளை விளக்குவதாக, குறிப்பாக மேல் நாட்டிலுள்ளவர் பயன்பெறும் வகையில், அமைவது நல்லதெனக் கருதினார்.

இதே காலத்தில், இதனை அறிந்த, சைவசித்தாந்தப் பேரறிஞர் ஏழாலைப் பண்டிதர் கலாநிதி மு. கந்தையா அவர்கள் இத்தகைய ஒரு நூல் தமிழிலும் வெளிவருவது அவசியம் என்ற கருத்தைத் தெரிவித்தார். தமிழில் எழுதும்பொழுது அவரிடம் வாழ்த்துரை வேண்டுவேன் என்று அவருக்கு எழுதினேன். அவர் அறிமுகம் என்ற பெயரில் வாழ்த்துரை ஒன்றை உடனே எழுதி அனுப்பி இப்பணியை உடனே தொடங்குமாறு குறிப்பால் உணர்த்தினார். பல பணிகளுக்கிடையில் இப்பெரு மக்களின் வேண்டுகோளை உடன் நிறைவேற்ற முடியவில்லை. பண்டிதரின் *சித்தாந்தச் செழும்புதையல்* என்ற நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதும் எனது பணிகளில் ஒன்றாக இருந்தது. நூல்களை எழுதத் தொடங்குமுன்பே இப்பெருமக்கள் இருவரும் சிவப்பேறு பெற்றுவிட்டனர்.

சுவாமி சிவநந்தி அடிகளார் வேண்டிய நூலை Understanding Saiva Siddhanta Philosophy என்ற பெயரில் எழுதி அவரின் நினைவாக 2004-ல் வெளியிட்டேன். இது அவரின் முதலாண்டு நினைவு நாளில் இலண்டனில் வெளிவந்தது. பண்டிதர் ஐயா வேண்டிய நூலை *சைவசித்தாந்த வினா விடை*

என்ற பெயரில் எழுதி இன்று அவரின் நினைவாக வெளியிடுகிறேன்.

சைவத்தமிழர்கள் இன்று தமது சமயத்தையும் சமயக் கொள்கை விளக்கமான சைவசித்தாந்த தத்துவத்தையும் அறியாமல் பொருளற்ற சடங்குகளிலும் நம்பிக்கைகளிலும் தமது காலத்தைக் கழிக்கின்றனர். சைவம் வீழ்ச்சி யடைகிறது என்பது பலரின் கருத்தாகவுள்ளது. சைவமக்களை நெறிப்படுத்தி வழிகாட்ட வேண்டியவர்களே இன்று சைவத்தின் வீழ்ச்சிக்குத் துணை போவதைக் காணமுடிகிறது. இந்த நிலையை மாற்றிச் சைவத்தைப் பேணிச் சிறப்புறச் செய்ய உழைத்தவர்கள் சுவாமி சிவநந்தி அடிகளாரும் பண்டிதர் கந்தையா அவர்களும் ஆவர். இப்பெருமக்களின் வேண்டுகோளை அவர்கள் காலத்தில் நிறைவேற்ற முடியவில்லையே என்ற எண்ணம் எனது மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. இது எனது தவக்குறைவு என்றே கருதுகிறேன்.

சைவசித்தாந்தம் ஒரு அறிவியல் தத்துவம்; தமிழர் தத்துவம். உலகத்துச் சமயதத்துவங்களில் சிறப்புமிக்க உயர்தனித் தத்துவமென உலக அறிஞர்களால் போற்றப்படுவது இது. உலகுடனும் இறையுடனுமான உயிரின் உறவை விளக்கி உடலையும் உயிரையும் வளர்த்து உய்தி பெறச் செய்வது சைவசித்தாந்தம். இது எம்மைப் பற்றிய தத்துவம். சைவர்கள் இதனை ஓரளவாவது அறிவதற்கும், அறிந்து சைவத்தின் மேன்மையை உணர்ந்து சைவநெறியில் நிற்பதற்கும் இந்நூல் துணைநிற்கும் என்ற நம்பிக்கையுடன் இதனை வெளியிடுகிறேன்.

எனக்குச் சைவசித்தாந்த அறிவூட்டியது திருவாவடுதுறை ஆதீனம். அதன் குருமுதல்வரின் அருள் வாழ்த்துரை இதில் உள்ளது. இலண்டன் மெய்கண்டார் ஆதீனத்து இன்றைய முதல்வர் யோகானந்த அடிகள் வாழ்த்துரை வழங்கியுள்ளார். இந்நூல் எழுத ஊக்குவித்த அமரர் பண்டிதர் கலாநிதி மு. கந்தையா அவர்களின் அறிமுகம் என்ற பெயரில் உள்ள வாழ்த்துரையும் இடம்பெறுகிறது. இப்பெருமக்களுக்கு நான் எற்றைக்கும் நன்றிக் கடப்பாடுடையேன்.

அன்பன்

கொழும்பு — **க. கணேசலிங்கம்**

# 1. சைவசித்தாந்தம்

## 1. சைவசித்தாந்தம் என்பதன் பொருள் என்ன?

*சைவம்* சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம். *சித்தாந்தம்* என்பது சிந்தித்துக் கண்டறிந்த முடிவான உண்மை. அந்தம் - முடிவு. ஆன்மீகம் தொடர்பான பல்வேறு கருத்துக்களையும் ஆராய்ந்து சிந்தித்து முடிந்த முடிவாகக் காணப்பட்டது *சைவ சிந்தாந்தம்.* சைவசித்தாந்தம் சைவசமயத்தின் தத்துவம்.

## 2. சைவ சமயத்தில் அதன் தத்துவத்தைத் தவிர வேறு எவை அதன் கூறுகளாக உள்ளன? அவற்றை விளக்குக?

சைவ சமயத்திலும் பிற சமயங்களிலும் தத்துவம், கிரியைகள், புராணங்கள் ஆகியவை முக்கிய கூறுகளாக உள்ளன.

சைவ நெறியில் ஈடுபாடு கொள்ளச் செய்து ஆன்மீக வளர்ச்சிக்குத் துணை செய்பவை சைவக் கிரியைகள். சைவ சமய உண்மைகளை கதை மூலம் உணர்த்துபவை சைவம் சார்ந்த புராணங்கள்.

சைவ சமய உண்மைகளை அறிவியல் நோக்கில் விளக்குவது அதன் தத்துவமான சைவ சித்தாந்தம். இவை தவிர, பக்தி வழியில் ஆன்ம வளர்ச்சிக்குத் துணை புரியும் சாதனங்களான திருமுறைகள் போன்ற நூல்களும் சைவத்தின் கூறாக உள்ளன.

## 3. சைவசித்தாந்தம் எதனை விளக்குகிறது?

நான் யார்? இறைவன் யார்? எனக்கும் இறைவனுக்கும் உள்ள உறவென்ன? நாம் காணும் உலகும் உலகப்

பொருட்களும் எத்தகையன? எமது குறை என்ன? குறையற்ற வாழ்வுக்கு வழி என்ன? இவை போன்ற கேள்விகளுக்கு விடையளித்து விளக்கம் தருகிறது. இந்த வகையில் இது எம்மைப் பற்றிய தத்துவமாக உள்ளது. இதனால் இதனை நாம் அறிவது அவசியமாகிறது.

**4. இறை, உயிர், குறித்த சைவசித்தாந்தக் கொள்கை என்ன?**

இறைவன் ஒருவனே. எல்லா நலங்களும் நிறைந்தவன் அவன். அவனைச் *சிவம்* என்றும் *பதி* என்றும் சித்தாந்தம் கூறுகிறது. சிவம் என்ற சொல் செம்பொருள் என்ற பொருள் கொண்டது. பதி என்பதற்கு தலைவன் என்று பொருள்.

உயிர்கள் பல. உயிர்களும் இறைவனைப் போல் அனாதியானவை. உயிர்கள் இயல்பாகவே குறையுடையன. அவற்றுக்குக் கட்டாக இருந்து அவற்றின் ஆற்றல்களை வெளிவரமுடியாமல் தடுப்பது இக்குறை. இதனை *ஆணவம்* என்று சைவ சித்தாந்தம் கூறும்.

**5. ஆணவத்தைப்போல் வேறு குறைகளும் உண்டா?**

ஆணவம் *மலம்* என்றும் *பாசம்* என்றும் கூறப்படும். மலம் என்றால் அழுக்கு என்று பொருள்படும். பாசம் என்பது கட்டு என்ற பொருள் தரும். ஆணவப் பிடியிலிருந்து உயிர் விடுபடுவதற்காக இறைவன் *கன்மம், மாயை* என்ற இரு பொருள்களை உயிருக்கு ஊட்டுகின்றான். இவையும் உயிருக்கு ஒரு வகையில் கட்டாக உள்ளன. இதனால் இவற்றையும் மலம் என்று கூறுவர். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் *மும்மலம்* எனப்படும்.



**6. முப்பொருள் என்று சைவ சித்தாந்தத்தில் கூறப் படுவது என்ன?**

**இறை, உயிர், தளை** என்பன முப்பொருள் என்று கூறப்படும். தளை, பாசம் என்பன ஒரு பொருட்சொற்கள். முப்பொருள்களையும் அறிந்தால், அனைத்தையும் அறிந்ததாகும். சான்றோர்கள் இதனை ஆய்ந்து அறிதல் பயனுள்ளது. இதனைக் கந்தபுராணம் பின்வருமாறு விளக்கும்.

*'சான்றவர் ஆய்திடத் தக்க வாம்பொருள்*
*மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன*
*ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை*
*வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே'.*

**7. சைவசித்தாந்தக் கருத்துக்கள் எந்த நூல்களில் உள்ளன?**

மெய்கண்ட சாத்திரங்கள் என்று கூறப்படும் பதினான்கு நூல்களில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் உள்ளன. இந்த நூல்கள் தமிழிலே எழுதப்பட்டவை. இவையே சைவசித்தாந்தத்துக்கு ஆணை நூல்களாக (பிரமாணமாக) உள்ளன.

**8. இவற்றைவிட வேறு நூல்களில் சைவசித்தாந்தக் கருத்து இல்லையா?**

வேதங்கள், சைவ ஆகமங்கள், பழந்தமிழ் நூல்கள், திருமுறைகள் ஆகியவற்றிலும் சைவசித்தாந்தக் கருத்துக்கள் உள்ளன.

**9. அப்படியானால், மேற்கூறப்பட்ட பதினான்கு தமிழ் நூல்களை மட்டும் சைவசித்தாந்த ஆணை நூல்களாகக் கொள்வதன் காரணம் என்ன?**

வேத இலக்கியங்களில் சைவத்துக்கு உடன்பாடற்ற கருத்துக்களும் ஒன்றுக்கொன்று முரணான கருத்துக் களும் உள்ளன. இந்திய தத்துவங்கள் பலவற்றுக்கும் பொதுவாக உள்ளவை வேதங்கள். சைவசித்தாந்த உண்மைகளும் பொதுவாகவே இவற்றில் காணப் படுகின்றன.

ஆகம நூல்கள் சைவம், வைணவம், சாக்தம் போன்ற சமயங்களுக்கு உரியனவாக உள்ளன. சைவ ஆகம நூல்களில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், வேத நூல்களை விடத் தெளிவாகவும் முரண்பாடுகளின்றியும் உள்ளன. இதனால் **சைவத்துக்கு வேதம் பொது, ஆகமம் சிறப்பு** என்று திருமூலர் போன்ற ஞானிகள் கூறியிருக் கிறார்கள்.

தொல்காப்பியம், திருக்குறள் போன்ற பழந்தமிழ் நூல்களில் சித்தாந்தக் கருத்துக்கள் பரவலாக உள்ளன. திருமுறைகளிலும் இவை உள்ளன. பழந்தமிழ் நூல்கள், திருமுறைகள், வடமொழியிலுள்ள வேதாகம நூல்கள் ஆகியவற்றிலுள்ள சைவசித்தாந்தக் கருத்துக்களின் தொகுப்பாகப் பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்கள் உள்ளன. இதனால் இவையே சைவ சித்தாந்த ஆணை நூல்களாகக் கொள்ளப்படுகின்றன.

மேலும் வேதாகம நூல்கள் அனைத்தும் இன்று கிடைப்பதில்லை. இறையருளால், அவற்றிலுள்ள கருத்துக்கள், மெய்கண்ட சாத்திரங்கள் என்ற தமிழ் நூல்களில் தரப்பட்டுள்ளன. இவற்றை எழுதிய ஞானிகள் இறையருள் பெற்ற அருளாளர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவை பற்றிய விரிவான விளக்கங்கள் 'சைவ சித்தாந்த நூல்கள்' என்ற பாடத்தில் தரப்பட்டுள்ளன.

# 2. கடவுள்

**1. கடவுள் என்று ஒரு பொருள் உண்டா? உண்டெனில் அதனை எவ்வாறு அறிவது?**

சைவ சமயம் கடவுளை நம்புகிற சமயம். கடவுள் உண்டு என்பது அதன் கொள்கை. கடவுள் உண்மையைப் பல வழிகளில் அது அறிவுறுத்துகிறது. சைவ நூல்களும் அருளாளரின் வாக்கும் செயலும் கடவுள் உண்மையைக் காட்டுகின்றன. தர்க்கமுறையிலும் அறிவியல் சார்ந்த தாகவும் விளக்கங்கள் சைவத்தில் தரப்பட்டுள்ளன.

ஒருவனால் ஆக்கப்பட்ட ஒரு பொருள் ஒரு காலப் பகுதியில் நிலைத்து நின்று பின் அழிகிறது. தோன்றி, நின்று, அழியும் எந்தப் பொருளுக்கும் ஆக்குபவன் அல்லது படைப்பவன் ஒருவன் வேண்டும். நாம் காணும் பிரபஞ்சம் ஒரு காலத்தில் பிரபஞ்சமுட்டையாக (Cosmic Egg) இருந்தது. அதிலிருந்து தோன்றி, விரிந்து இன்றைய நிலைக்கு வந்துள்ளது. நீண்ட காலத்தின் பின் இது சுருங்கி மீண்டும் முன்னர் இருந்த நிலைக்குப் போகும். அதாவது, இப் பிரபஞ்சத்திற்கும் தோற்றம், நிலைப்பாடு, அழிதல் ஆகிய நிலைகள் உள்ளன. இதனால் இதனையும் படைத்தவன் ஒருவன் இருக்கிறான் என்று நம்பலாம். அவனைப் பொதுவாகக் கடவுள் என்கிறோம்.

**2. சைவ சமயம் கடவுளை எவ்வாறு நோக்குகிறது?**

எல்லா உயிர்களுக்கும், எல்லா நாட்டினருக்கும் தலைவனாகக் கடவுளைச் சைவம் கொள்கிறது. எல்லா நற்பண்புக் கூறுகளின் முடிந்த முடிவாக, செம்மையின்

நிறைவாக, இறைவனைக் கண்டு, அவனைச் சிவன் என்று அழைப்பது தமிழகத்துப் பண்பாகவும் மரபாகவும் உள்ளன. மாணிக்கவாசகச் சுவாமிகளின் பின்வரும் திருவாசகத் தொடர் இதனை உணர்த்துகிறது.

*'தென்னா டுடைய சிவனே போற்றி!*
*என்னாட் டவர்க்கும் இறைவா போற்றி!'*

உலகுக்கு ஒருவனான இறைவனை தமிழர்கள் *சிவன்* என்று போற்றுகிறார்கள். சிவம் என்னும் சொல் செம்மை, மங்கலம் என்னும் பொருள் தருவது.

**3. சிவன் எத்தகையவன்? அவனது அருள் எத்தகையது?**

சிவனின் உள்ளார்ந்த இயல்பு அறிவு வடிவு. எங்கும் பரந்தும் எதிலும் கலந்தும் எதனையும் கடந்தும் இருப்பது அவனின் தன்மை. '*அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து*', என்பது திருவருட் பயன் தரும் விளக்கம். **கடவுள்** என்ற தமிழ்ச் சொல் எதனையும் கடந்தும், எதனுள்ளும் கலந்தும் இருக்கிறான் என்பதை உணர்த்துகிறது.

சிவன் உயிர்களின் மேல் அளவற்ற கருணையுள்ளவன். அறிவாகிய சிவனின் பிரிவில்லாதது அவனின் பெருங்கருணையாகிய அருள். ஞாயிறும் ஒளியும் போல் சிவனும் அவனின் அருட் சக்தியும் பிரிவில்லாதவை.

**4. பதி என்ற பெயரைவிட வேறு பெயர்கள் சிவனுக்கு உண்டா?**

உயிர்களுக்குத் தலைவன் என்ற பொருளில் அவன் பதி என்று அழைக்கப்படுகிறான். உயிர்களுக்கு அருள் வழங்கும் அவனின் நிலை பதி நிலை. இது அவனின் பொது நிலை. தன் நிலையில் பரன், தற்பரன், சிவன், சுத்தசிவன் போன்ற பெயர்களால் அழைக்கப்படுகிறான். இப்பெயர்கள் தமிழ் நூல்களில் காணக் கூடியன. வடமொழி நூல்களில் **பிரமம்** என்று அழைக்கப்படுவதைக் காணலாம்.



**5. சிவனின் இயல்புகள் எத்தனை? விளக்குக.**

மாறுதல் அடையாமல் நிலைத்தல் உடைமை, பேரறிவு உடைமை, பேரின்பமுடைமை ஆகியவை சிவனின் குணங்கள் என உபநிடதங்கள் உணர்த்துகின்றன. இவை முறையே சத்து, சித்து, ஆனந்தம் எனப்படும். **சச்சிதானந்தம்** (சத் + சித் + ஆனந்தம்) என்ற இறைவனின் பெயர் இதனைக் குறிப்பது.

ஆகமங்கள் சிவனை எட்டுக் குணங்கள் உடையவன் என்று கூறும். இக்குணங்கள் வருமாறு :

1. தன்வயத்தன் ஆதல் (சுவதந்திரத்துவம்)
2. தூய உடம்பினன் ஆதல் (விசுத்த தேகம்)
3. இயற்கை உணர்வினன் ஆதல் (அனாதி போதம்)
4. முற்றும் உணர்தல் (சர்வஞ்ஞத்துவம்)
5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் (நிராமயம்)
6. பேரருள் உடைமை ( அலுப்த சக்தி)
7. முடிவிலாற்றலுடைமை (அநந்த சக்தி)
8. வரம்பிலின்பமுடைமை (நித்திய திருப்தி)

(எண் குணங்களும் தமிழில் தரப்பட்டு அவற்றின் வடமொழிப் பதங்கள் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன).

இறைவன் **எண்குணத்தான்** என்ற பெயரில் திருக்குறளிலே குறிக்கப்படுகிறான்.

*'கோளிற் பொறியில் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை'.* - குறள்

இக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர், இறைவனின் எண்குணங்களாக மேலே குறிப்பிடப்பட்ட குணங்களைத் தருகிறார். முடிவிலே, '*இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது*' என எழுதுகிறார். பரிமேலழகர் ஒரு வைணவசமயத்து ஞானி என்பது குறிப்பிடத்தக்கது.

மேலே கூறப்பட்ட எட்டுக் குணங்களும் ஆகம வழக்காக வந்தவை. உபநிடத வழக்காக வந்த சத்து, சித்து. ஆனந்தம் என்ற மூன்று குணங்களின் விரிவாக இவை உள்ளன.

**6. கடவுளுக்குக் குணங்கள் இல்லை; அவன் குணங்களைக் கடந்தவன், என்றெல்லாம் சொல்லப்படுகிறதே. இது குறித்த விளக்கம் என்ன?**

கடவுள் *நிர்க்குணன்* (குணங்களற்றவன்), *குணாதீதன்* (குணங்களைக் கடந்தவன்) என்றெல்லாம் கூறப்படுவது உண்மை. இவற்றின் பொருள் உயிருக்கு உள்ள குணங்கள் அல்லது இயல்புகள் இல்லாதவன் என்பதே. சத்துவம், இராசதம், தாமசம் ஆகியவை உயிரின் இயல்புகள். இறைவனுக்கு உயிருக்குள்ள இத்தகைய இயல்புகளும் இல்லை, குணங்களும் இல்லை. இவற்றைக் கடந்தவன் இறைவன்.

**7. கடவுளின் பொது இயல்பு, சிறப்பு இயல்பு என்பவை எவை?**



கடவுளின் இயல்பு இரண்டாகக் கொள்ளப்படும். இவை சிறப்பு இயல்பு, பொது இயல்பு ஆகும். இவற்றை முறையே *சொரூபலக்கணம், தடத்தலக்கணம்* என்பர். சைவசித்தாந்தத்தில் காணப்படும் இறைவன், உயிர், ஆணவம், கன்மம், மாயை ஆகிய ஐந்திற்கும் இத்தகைய இருவித இயல்புகள் உண்டு.

எதிலும் தொடர்பு இன்றித் தன்னளவில் நிற்பது சொரூபலக்கணம் என்னும் சிறப்பு இயல்பு. இந்நிலை அதன் *காரண வடிவு* என்று கொள்ளப்படும். பிற பொருள்களோடு தொடர்பு கொண்டு நிற்கும் நிலை தடத்தலக்கணம் என்னும் பொது இயல்பு. இந்நிலை அதன் *காரிய வடிவு* என்று கொள்ளப்படும்.

இறைவன் தன்னளவில் எந்த மாறுதலுமின்றி, உயிர்களுடனும் பிற பொருட்களுடனும் எந்தத் தொடர்பு மின்றி இருக்கும் நிலை அவனின் சிறப்பு இயல்பு. அவன் அவற்றுடன் தொடர்பு கொண்டு இருக்கும் நிலை அவனின் பொது இயல்பு.

இறைவனின் பொது இயல்பாக இரு நிலைகள் உள்ளன. ஒன்று அவனின் பிரிவில்லாத அருளைத் திருமேனியாகக் கொண்டு பல வடிவங்கள் தாங்கி நிற்கும் நிலை. இன்னொன்று உயிர்களுடனும் பிற பொருட்களுடனும் ஒரே நேரத்தில் *ஒன்றாயும் வேறாயும் உடனாயும்* நிற்கும் நிலை. இது அவன் கொள்ளும் *அத்துவித உறவு* நிலை.

**8. சைவ சமயத்தில் கடவுளின் வடிவம் எத்தகையது?**

சிவன் தன்னிலையில் அனைத்தையும் கடந்ததாக இருப்பின் அவனால் உயிர்களுக்கு எத்தகைய பயனும்

விளையப் போவதில்லை. உயிர்களின் மேற்கொண்ட கருணையால், அவற்றிற்கு உதவுவதற்காக அவன் தனது அருளையே திருமேனியாகக் கொண்டு வேறுபட்ட வடிவங்கள் எடுக்கின்றான். அவற்றின் மூலம் பல அருட்செயல்கள் புரிந்து உயிர்களுக்கு நலமளிக்கிறான். அவனின் அருளும் அருட் செயல்களும் அறிவின் காரியமாக அமைந்தவை. *ஞானசக்தி* எனப்படும் அவனின் அறிவு 'சக்தி' என்பதால் அவன் கொண்ட வடிவங்கள் *சக்தி திருமேனிகள்* எனப்படும். அவனது அருட்செயல்கள் *சக்தி செயல்கள்* எனப்படும்.

இறைவன் மூவகைத் திருமேனிகள் கொண்டு அருட்செயல் புரிகிறான். இவற்றில் ஒன்று *அருவத் திருமேனி*. இது கண்ணுக்குப் புலனாகாதது. மற்றையது *உருவத் திருமேனி*. இது கண்ணுக்குப் புலனாவது. மூன்றாவது *அருவுருவத் திருமேனி*. இது அருவத்துக்கும் உருவத்திற்கும் இடைப்பட்டது; ஒரு பொழுது கண்ணுக்குப் புலனாகியும், புலனாகமலும் இருக்கும் உருவம் இது. ஆகவே, இறைவன் கொள்ளும் வடிவங்கள்' **அருவம், உருவம், அருவுருவம்** என மூன்று நிலைகளில் உள்ளன. (இவற்றின் விரிவான விளக்கும் பின்வரும் பாடங்களில் தரப்படும்).

### 9. இறைவனின் அருட் செயல்கள் முத்தொழில் என்றும் ஐந்தொழில் என்றும் கூறப்படுகின்றன. இவற்றின் பொருள் என்ன?

உயிர்களுக்கு வேண்டிய உடம்பையும், உடற கருவிகளையும், உயிர்களின் அனுபவத்திற்கான உலகையும் இறைவன் படைத்தளிக்கிறான். இது அவனின் *படைத்தல்*



தொழில். படைத்தவற்றை ஒரு கால அளவுக்கு நிலை பெறச் செய்கிறான். இது அவனின் *காத்தல்* தொழில். அவற்றின் காலம் முடிந்தபின் அழிக்கிறான். இது அவனின் *அழித்தல்* தொழில். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய இம்மூன்றும் *முத்தொழில்* எனப்படும். .

உலக வாழ்வில் உயிர் செயல் புரிந்து, அனுபவம் பெற்று, அறிவு விளக்கம் பெறுகிறது. இதற்குத் துணைபுரிவது இறை அருள். ஆனால் அது தன்னை உயிருக்குக் காட்டாமல் மறைத்துக் கொண்டிருக்கிறது. இது இறைவனின் *மறைத்தல்* தொழில். ஆன்மீக வளர்ச்சியடைந்த உயிருக்கு இறுதியில் 'இறைவன் தன்னைக் காட்டி அருள்புரிகிறான்; உயிர் முத்தியடையத் துணைபுரிகிறான். இது அவனின் *அருளல்* தொழில். முத்தொழிலுடன் மறைத்தல், அருளல் ஆகிய இரண்டையும் சேர்த்து *ஐந்தொழில்* என்று கூறுவர். காத்தலில் மறைத்தலும், அழித்தலில் அருளலும் அடங்கும். ஆகவே முத்தொழில் என்பதும் ஐந்தொழில் என்பதும் வேறுபட்டவையல்ல என்பது கருதற்பாலது. இறைவன் உயிர்களின் நலத்திற்காகவே ஐந்தொழில் புரிகிறான். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலும் வடமொழியில் முறையே சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரம் எனப்படும்.

### 10. சைவத்தில் எத்தனை கடவுளர் உள்ளனர்?

சைவத்தில் கடவுள் ஒருவரே. அவரைச் சிவம் அல்லது சிவன் என்று சைவர்கள் அழைக்கிறார்கள். '*ஒன்றே பதி*' என்று சிவஞானபோதம் கூறுகின்றது.

*'ஒருவன் என்னும் ஒருவன் காண்க'* என்று திருவாசகமும் *'ஒருவனே தேவனும்'* என்று திருமந்திரமும் உரைக்கின்றன.

ஒன்றாகிய சிவம் உயிர்களுக்கு அருளுவதற்காகப் பல வடிவங்கள் எடுக்கிறது. அவை வேறு வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றன.

**11. அம்பிகை, விநாயகர், போன்ற தெய்வங்கள் சிவனின் வேறானவையல்லவா? அப்படியாயின் ஒன்றே பதி என்று எங்ஙனம் உரைக்கலாம்?**

நாம் பார்த்து வணங்கும் வடிவங்களெல்லாம் சிவனின் வடிவங்களே. அம்பிகையின் வடிவம் சிவனின் அருளைக் குறிப்பது. விநாயகர், முருகன், வைரவர், வீரபத்திரர் ஆகிய தெய்வங்கள் அருளும் வகையால் சிவன் கொண்ட திருவடிவங்களே. ஒரு மனிதன் வீட்டில் தந்தை, கணவன் போன்ற நிலைகளிலும், வெளியில் ஆசிரியர், பொறியியலாளர் போன்ற நிலைகளிலும் காணும் வடிவங்கள் போன்றவை இவை. இவற்றைவிட சிவ மூர்த்தங்களாக இருபத்தைந்து வடிவங்கள் கூறப்படுகின்றன. தட்சணாமூர்த்தி, நடராசர் போன்ற வடிவங்கள் இவற்றில் அடங்கும். சிவலிங்க வடிவமும் இவையும் சைவர்களின் வழிபாட்டுக்குரிய வடிவங்கள்.

# 3. உயிர்

**1. உயிர் என்று ஒன்று இருக்கிறதா? இது குறித்த சைவசித்தாந்தக் கருத்து என்ன?**

உயிர், ஆன்மா என்பன ஒரு பொருட் சொற்கள். உயிருக்குத் தோற்றமும் முடிவும் இல்லை. அது என்றும் நிலையானது. மனிதர்கள், மிருகங்கள், பறவைகள் ஆகியவற்றுக்கு உயிர் உண்டு. உயிர்கள் பல என்பதும், ஒவ்வொரு உயிரும் தனியான ஒன்று என்பதும் சைவசித்தாந்தக் கருத்து.

**2. உயிர்கள் பல என்பதற்கு என்ன காரணம்?**

ஒரு மனிதனைப் போல் இன்னொரு மனிதன் இருப்பதில்லை. தோற்றம், செயல், சிந்தனை ஆகியவை மனிதனுக்கு மனிதன் வேறுபடுகின்றன. மிருகங்கள், பறவைகள், நீர்வாழ்வன, ஊர்வன என்று பல உயிர்கள் உள்ளன. அவற்றிலும் ஒவ்வொரு தொகுதிக்குள்ளும் பற்பல வேறுபாடுகள் உள்ளன. இதனால் உயிர்கள் பல என்பது புலனாகின்றது. உயிர் உண்டு, அது பலவாக உள்ளது என்பது சைவத்தின் கொள்கை.

**3. உயிர் உண்டு என்பதை எவ்வாறு அறிவது?**

நாம் 'எனது உடல்', 'எனது கை', 'எனது மனம்' என்றெல்லாம் பேசுகின்றோம். 'எனது' என்று சொல்வதால் நாம் வேறு எமது கை கால் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலிய அகக்கருவிகளும் எம்மில் வேறானவை என்பது புலனாகிறது. இதனால் 'நான்' வேறு, எனது உடலும் உடற்கருவிகளும் வேறு என்று அறிந்து கொள்கிறோம்.

ஆழ்ந்த உறக்கதில் இருக்கும்போது இவை எதுவும் இயங்குவதில்லை. எதையும் நாம் அறிவதோ உணர்வதோ இல்லை. மனம் முதலிய கருவிகள் செயலிழந்து விடுகின்றன. ஆயினும் உறக்கம் நீங்கியபின், 'நான் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தேன்' என்ற உணர்வு உண்டாகிறது. இதனால் எமது உடலுக்கும் மனம் முதலிய கருவிகளுக்கும் வேறான ஒன்று உள்ளதென்பதும் 'நான்' என்று இதனையே நாம் குறிப்பிடுகிறோம் என்பதும் அறியப்படுகிறது. இதுவே உயிர் என்று கருதமுடிகிறது.

**4. உயிர் கடவுளால் படைக்கப்படவில்லையா?**

இல்லை. உயிர் கடவுளால் படைக்கப்படவில்லை. கடவுளைப் போலவே உயிரும் அனாதியானது. அதற்குத் தோற்றமோ அழிவோ இல்லை.

**5. உயிர் பிறந்து இறப்பது இல்லையா?**

பிறந்து இறப்பது உயிருடன் கூடிய உடம்பே; உயிர் அல்ல. உடம்பையும் அதன் உட்கருவிகளையும் இறைவன் படைத்து உயிருடன் சேர்க்கிறான். இது பிறப்பு எனப்படும். அவை குறிப்பிட்ட ஒரு கால அளவுக்கு நிலைத்து நின்று பின் அழிகின்றன. இது இறப்பு எனப்படும். ஆகவே, பிறப்பு இறப்பு என்பன உயிருடன் சேர்ந்த உடம்பைப் பற்றியனவே; உயிரைப் பற்றியன அல்ல.

**6. உயிரைப் பசு என்று குறிப்பிடுவதற்குக் காரணம் என்ன?**

உயிருக்குப் பல குறைகள் உள்ளன. அறியாமை, தற்செருக்கு, கோபம் போன்றவை இவைகள். இவற்றுக்கு மூலம் **ஆணவம்** என்ற ஒன்று. இது உயிருக்கு கட்டாக அமைந்து, உயிரின் ஆற்றல்கள் வெளி வர முடியாதபடி தடை செய்கின்றது. **பாசம்** என்பதும் 'கட்டு' என்ற பொருள் தருவது. ஆகவே ஆணவம் ஒரு பாசப்பொருள். **கன்மம், மாயை** என்பனவும் ஒரு வகையில் உயிரைக் கட்டுபடுத்துவதனால், அவையும் பாசம் எனப்படுகின்றன. பாசத்தினால் கட்டுப்பட்ட ஒன்று **பசு** எனப்படுகிறது. உயிர் பாசத்தினால் கட்டுப்பட்டதாதலின் (பசுத்துவ முடையது என்பதால்) பசு எனப்படுகிறது.



**7. உயிரின் இயல்பு என்ன?**

உயிர் ஒரு அறிவுடைப் பொருள். அறிவு உள்ளபடியால் அதனால் செயல்புரியவும் விருப்பப்படவும் முடிகிறது. சைவசித்தாந்தத் துறையில் உயிரின் அறியும் ஆற்றல், செயல் புரியும் ஆற்றல், விரும்பும் ஆற்றல் ஆகியவை முறையே **ஞானம், கிரியை, இச்சை** என்று அழைக்கப்படுகின்றன. இச்சை, ஞானம், கிரியை ஆகியவற்றின் வடிவமாகவே உயிர் இருக்கிறது. இதனால் அதனை 'இச்சா ஞானக் கிரியா சொரூபி' என்று கூறுவதும் உண்டு. ஆயினும் இந்த ஆற்றல்கள் தானாக வெளிப்பட முடியாமல், ஆணவத்தின் சேர்க்கையால் தடைப் பட்டுள்ளன.

கடவுள் படைத்தளித்த உடம்பின் மூலமே உயிர் எதனையும் அறிவதும், செயற்படுவதும், இச்சை கொள்வதுமாகவுள்ளது. உடம்பென்னும் பொழுது அது கண் முதலிய புறக்கருவிகளையும், மனம் முதலிய அகக்கருவிகளையும் உள்ளடக்கும். உயிர் தானாக எதனையும் அறியும் நிலையில் இல்லை. *அறிவித்தால் அறியும் இயல்புடையது* உயிர்.

எதனையும் சார்ந்திருப்பதும் உயிரின் இயல்பு. எதனைச் சார்ந்திருக்கிறதோ அதன் தன்மையை அது பெறுகிறது. உயிரின் இத்தன்மை 'சார்ந்ததன் வண்ண மாதல்' என்று கூறப்படும். உலகப் பொருட்களைச் சார்ந்திருக்கும்போது உலகப் பொருட்களின் தன்மையைக் கொண்டிருக்கிறது. முத்தியடைந்த பொழுது இறையைச் சார்ந்திருக்கும். அப்பொழுது அது இறைதன்மையைக் கொண்டிருக்கும்.

'அறிவித்தால் அறிவது', 'சார்ந்ததன் வண்ணமாதல்' ஆகிய இயல்புகள் கொண்ட நிலை உயிரின் சொரூப நிலை (தன் நிலை) என்று சைவ சித்தாந்தம் குறிப்பிடும்.

பாசத்தைச் சார்ந்து கட்டுப்பட்டு இருக்கும் பொழுது உயிர் பல்வேறு குணங்களைக் கொண்டிருக்கும். இது அதன் பொதுநிலை. சைவ சித்தாந்தத்தில் இந்நிலை 'தடத்த நிலை' என்று கூறப்படும். இதில் 'அவத்தைகள்' என்று உயிரின் பல்வேறு நிலைகள் கூறப்படுகின்றன.

**8. அவத்தை என்பதன் விளக்கம் என்ன?**

அவத்தை (அவஸ்தை) என்பது (உயிரின்) அனுபவ நிலை. ஆன்மீக வளர்ச்சியில் உயிர் ஒன்றன்பின் ஒன்றாகப் பல பிறவிகள் எடுக்கிறது. பிறவிகள் எடுக்குமுன், ஆணவத்துடன் கூடி, தனது ஆற்றல் எதுவும் வெளிப் படாமல், உயிர் ஒரு தனி நிலையில் இருந்தது. இந்த நிலை உயிரின் *கேவல நிலை* எனப்படுகிறது.

பிறவிகள் எடுத்த உயிர் உடல், உலகப் பொருட்கள் ஆகியவற்றுடன் கூடிச் செயற்படுகின்றது. அதன் ஆற்றல்கள் சிறிது சிறிதாக வெளிப்படுகின்றன. இந்த நிலை உயிரின் *சகல நிலை* எனப்படுகின்றது.



முத்தியடைந்த பொழுது, உயிரைப் பிணித்த ஆணவம், கன்மம், மாயை ஆகியவை விலகிப் போக அது சிவத்தைச் சார்கிறது. இந்த நிலை உயிரின் *சுத்த நிலை* எனப்படுகிறது.

கேவலம், சகலம், சுத்தம் ஆகிய மூன்று நிலைகளும் உயிரின் மூன்று அவத்தைகள். இவை *காரண அவத்தை* எனப்படும் அனுபவ நிலைகள். இவை தவிர சகல நிலையில் உயிர் *சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்* ஆகிய அனுபவ நிலைகளைப் பெறும். இவை முறையே *நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல்* எனத் தமிழில் கூறப்படும். இந்த அனுபவ நிலைகள் *காரிய அவத்தை* எனப்படும்.

**9. மும்மலங்களின் பிணிப்பு உயிருக்குயிர் வேறுபடுகிறதா?**

ஆம். மலப்பிணிப்புக்கேற்ப உயிர்களை மூன்று வகையாகத் தொகுப்பதுண்டு. ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலக் கட்டுடைய உயிர்கள் ***சகலர்*** எனப்படுவர். ஆணவமும் கன்மமுமாகிய இருமலக் கட்டுடைய உயிர்கள் *பிரளயாகலர்* எனப்படுவர். ஆணவக்கட்டு மட்டும் உடைய உயிர்கள் *விஞ்ஞானகலர்* எனப்படுவர்.

**10. தத்துவத்துறையில் 'சத்', 'அசத்' என்று இரு சொற்கள் காணப்படுகின்றன. இவற்றின் பொருள் என்ன? ஆன்மா சத்தா? அசத்தா?**

இறை, உயிர், உலகப் பொருட்கள் ஆகியவற்றை *சத், அசத் (சத்து. அசத்து)* என்று இரு பிரிவாகத் தொகுப்பதை இந்திய தத்துவங்களில் காணலாம். இவற்றின் விளக்கம் தத்துவத்துக்குத் தத்துவம் வேறுபடுகிறது. உயிருள்ளது -

உயிரற்றது, நிலையுள்ளது-நிலையற்றது என்று வெவ்வேறு விளக்கங்கள் தரப்படுகின்றன.

இத்தத்துவங்கள் பொதுவாக இறைவனைச் சத் என்றும் பிறவற்றை அசத் என்றும் பிரிக்கின்றன. சத், அசத் என்ற சொற்களின் விளக்கத்திற்கேற்ப உயிரைச் சத் என்றோ அசத் என்றோ இத்தத்துவங்கள் உரைக்கின்றன. சைவ சித்தாந்தத்தின்படி சத்தாகிய இறையைச் சாரும் பொழுது உயிர் சத்தாகவே மாறுகிறது. ஆனால் அது சத்தல்ல. அசத்தாகிய உலகப் பொருட்களைச் சாரும் பொழுது அது அசத்தாகவே மாறுகிறது. ஆனால் அது அசத்தல்ல. இத் தன்மையால் உயிரைச் சத்தென்றோ, அசத்தென்றோ கூறமுடியாத ஒரு நிலை உள்ளது. இதனால் **சதசத் (சதசத்து)** என சைவ சித்தாந்தத்தில் உயிர் அழைக்கப்படுகிறது.

சதசத் என்பதன் பொருள் சத்தாகவும் அசத்தாகவும் இருப்பது என்பதல்ல; சத்தும் அல்ல அசத்தும் அல்ல என்பதே.

சத், அசத் என்ற சொற்களுக்குச் சைவ சித்தாந்தம் தரும் விளக்கமும் மற்றைய தத்துவங்களிலிருந்து சிறிது வேறுபடுகிறது. சத் என்பது நிலையான, மாற்றமில்லாத ஒன்றையே குறிக்கும். இதன்படி இறைவன் சத்துப் பொருள்; உயிர் சதசத்து; மற்றையவை அசத்துப் பொருட்கள்.

**11. 'சத்' என்பதைப்போல் 'சித்' என்றும் சொல்லப் படுகிறதே இதன் விளக்கம் என்ன?**

சித் (சித்து) என்றால் அறிவு. இறைவன் இயல் பாகவே எதனையும் அறியும் அறிவுப் பொருளானவன். ஆகவே அவனைச் *சித்* என்று கூறுவர்.



உலகப் பொருட்கள் அறிவற்றவை; அவை சடப் பொருட்கள். ஆகவே அவை *அசித்* என்று கூறப்படுகின்றன. உயிர் அறிவித்தால் அறியும் இயல்புடையது. சார்ந்ததன் வண்ணமாவது என்பதால், அது எதனைச் சாரா்ந்திருக்கிறதோ அதற்குத்தக அதன் அறிவு விளங்குகிறது. அறிவுடையது (சித்) என்றும் கூறமுடியாமல், அறிவற்றது (அசித்து) என்றும் கூறமுடியாத நிலையில் அது இருக்கிறது. இதனால் உயிர் *சிதசித்து* எனக் கூறப்படுகிறது.

இறைவனின் அறிவைப் போலன்றி, உயிரின் அறிவு கட்டுப்பட்ட அறிவாக உள்ளது. இதனால் பதியாகிய இறைவனைச் 'சூக்குமசித்து' என்றும், பசுவாகிய உயிரை 'தூலசித்து' என்றும் அழைப்பதுமுண்டு.

**12. இறைவனின் பொது இயல்பு, சிறப்பு இயல்பு என்பவை போல் உயிரின் இயல்புகளை இப்படி வகைப்படுத்துவதுண்டா?**

உயிருக்கு இறைவன் கை, கால், கண், வாய் முதலிய கருவிகளும் மனம், புத்தி முதலிய கரணங்களும் சேர்ந்த உடம்பைப் படைத்து அளிக்கின்றான். இக்கருவி கரணங்கள் மூலமே உயிர் எதனையும் அறிகின்றது. அதுவும் இறையருளால் நிகழ்கிறது. இறைவன் அறிவிக்க உயிர் அறிகிறது. *அறிவிக்க அறிவது* உயிரின் பொது இயல்பு. முன்பு கூறிய நனவு, கனவு போன்ற அவத்தை நிலைகளுக்கு உயிர் உட்படுவதும் அதன் பொது இயல்பு.

உயிர் ஏதேனும் ஒன்றைப் பற்றி, "சார்ந்ததன் வண்ணமாக நிற்கும்". இது பொது வகையில் அமைந்த அதன் 'சிறப்பியல்பு'. கருவி கரணங்கள் நீங்கிய நிலையில் சிவமாம் தன்மை பெற்று நிற்கும் நிலை உயிரின் சிறப்பு

வகையாக அமைந்த 'சிறப்பியல்பு'. சுருங்கச் சொல்லின், பிறப்புக்குட்பட்ட நிலை உயிரின் பொது இயல்பு. பிறப்பு நீங்கி சிவத்தைச் சேர்ந்த நிலை உயிரின் சிறப்பு இயல்பு.

**13. உயிர் பிறவி எடுப்பதன் குறிக்கோள் என்ன?**

உயிருக்கு இயற்கைக் குற்றமாக (சகச மலமாக) அமைந்த ஆணவத்தின் பிடியிலிருந்து விடுபட்டு சிவபெருமானின் திருவடியைச் சேர்தலே பிறவி என்பதன் குறிக்கோள். சிவனின் திருவடி அவனின் அருளேயாகும்.

"இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்", என்னும் தவத்திரு ஆறுமுக நாவலரின் வார்த்தையும் சிந்தனைக்குரியது.

# 4. ஆணவம்

**1. ஆணவம் என்பதன் பொருள் என்ன?**

ஆணவம் என்ற சொல் அணுத்தன்மை ஆக்குவது (சிறிதாக்குவது) என்ற பொருளில் அமைந்தது. உயிரின் ஆற்றல்களை விளங்க விடாமல் கட்டுப்படுத்தி, அதனைச் சிறுமைப்படுத்துவது ஆணவம்.

**2. ஆணவம் உயிருடன் எப்பொழுது சேர்ந்தது?**

ஆணவம் குறிப்பிட்ட ஒரு காலப்பகுதியில் உயிருடன் சேரவில்லை. இறைவனைப் போல் ஆணவத்துக்கும் தோற்றமும் முடிவும் இல்லை. செம்பில் களிம்பு போலவும் நெல்லில் உமிபோலவும் ஆணவம் இயற்கையாகவே உயிருடன் சேர்ந்திருக்கிறது. இதனால் ஆணவத்தைச் 'சகச மலம்' என்று குறிப்பிடுவதுண்டு. சகசம் - இயற்கையானது; மலம் - அழுக்கு. ஆணவம் உயிருடன் அனாதியே சேர்ந்திருப்பது.

**3. ஆணவம் உயிரைச் சிறுமைப்படுத்துவது எப்படி?**

உயிருக்குச் சில ஆற்றல்களுள்ளன. எதனையும் அறிகின்ற ஆற்றல் உண்டு. இந்த ஆற்றல் ஞான சக்தி எனப்படும். இது போல் எதனையும் செய்யவும் விரும்பவும் வேண்டிய ஆற்றல்கள் உண்டு. இவை முறையே கிரியா சக்தி, இச்சா சக்தி எனப்படும். ஆணவம் இருள் போல் இருந்து உயிரின் அறிவு, இச்சை, செயல் (ஞானம், இச்சை, கிரியை) ஆகியவற்றை விளங்கவிடாமல் மறைக்கிறது. இங்ஙனம் உயிருக்கு ஒரு தடைபோல் நின்று ஊறு விளைத்து, உயிரைத் தவறான வழியில் செலுத்திச் சிறுமைப்படுத்துகிறது.

**4. ஆணவம் என்பது தற்செருக்கு அல்லது கர்வம் (ego) என்று பொது வாகக் கூறப்படுகிறது. இது சரியான கருத்தா?**

ஆணவம் என்பது தற்செருக்கு அல்ல. தற்செருக்கு, அறியாமை போன்றவற்றுக்கு மூலமாக இருப்பது ஆணவம். உயிரின் துன்பங்கள் இடர்களுக்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது இது.

**5. ஆணவம் ஒன்றுதான் உரியின் குறைகளுக்கு அடிப்படைக் காரணமா? கன்மமும் மாயையும் உயிருக்கு ஊறு செய்வதில்லையா?**

எமது செயல்கள், விருப்பங்கள் ஆகியவை எமது அறிவுக்கமைய வெளிவருவன. எமது அறிவுக்குத் தடையாக இருந்து அறியாமையை உண்டு பண்ணுவது ஆணவம். ஆகவே ஆணவமே எமது அடிப்படைப் குறையாக உள்ளது. ஆணவத்தின் வெளிப்பாடான அகந்தை, மமதை முதலியவற்றால் எதனையும் நடுநிலையில் நின்று பார்க்கும் தன்மையை நாம் கொள்வதில்லை. இதனால் தவறான வழிகளில் ஈடு படுகிறோம். இந்த நிலையை உருவாக்கும் தற்செருக்கு, அறியாமை போன்றவற்றிற்கு மூலகாரணமாக இருப்பது ஆணவம் என்பதால் அது *மூலமலம்* என்றும் கூறப் படுகிறது.

உயிரைப் பிணித்த ஆணவமல நீக்கத்துக்காக இறைவனால் அளிக்கப்பட்டவை கன்மமும் மாயையும். இவையும் ஆணவமலத்தின் பிடி விலகும் வரை உயிருக்குக் கட்டாக அமைந்து தம்மளவில் ஊறு செய்வன. (இது குறித்த விளக்கம் பின்னுள்ள பாடங்களில் தரப்பட்டுள்ளன).



**6. ஆன்மாவுக்கு ஊறு செய்வதில் ஆணவ மலத்தின் இயல்பு எவ்வாறு அமைந்துள்ளது?**

தன் நிலையில் அது உயிரின் அறிவை மறைத்து ஊறு செய்கிறது. இங்ஙனம் மறைக்கும் அதன் ஆற்றல் '*ஆவாரக சக்தி*' எனப்படும். (ஆவாரகம் - மறைத்தல்). இது அதன் சிறப்பியல்பு. இது ஆணவ மலத்தின் தன்னியல்பு அல்லது சொரூபலட்சணம் எனப்படும்.

இன்னொரு வகையிலும் ஆணவம் செயற்படுகிறது. கன்மம், மாயையுடன் கூடி உயிரைத் தவறாக அறியச் செய்கிறது. கன்மமும் மாயையும் உயிரின் அறிவாற்றலை திருத்தமுறச் செய்கின்றன. இருளிலே எதனையும் காணமுடியாத நிலையில் நாம் இருக்கும்பொழுது ஒரு கைவிளக்கு இருளை ஓரளவு விலக்கி பொருட்களைக் காணத் துணை புரிகின்றது. ஆனால் அதன் மங்கிய ஒளியில் பொருட்களைச் சரியாகப் பார்க்காமல் தவறாகக் காணும் நிலையும் உண்டாகிறது. இது போன்று, ஆணவ இருளில் இருக்கும் உயிருக்கு, கன்மமும் மாயையும், ஆணவ இருளை ஓரளவு நீக்கினாலும், தவறாக அறியும் நிலையையும் உண்டு பண்ணுகின்றன. இந்த நிலை உண்மையில் ஆணவத்தின் சேர்க்கையால் உண்டானதே. இதனைச் செய்யும் ஆணவத்தின் ஆற்றல் '*அதோ நியாமிகா சக்தி*' எனப்படும். 'அதோ நியாமிகை' என்றால் 'கீழ்ப்படுத்தி வைத்தல்' என்பது பொருள். இது ஆணவத்தின் பொது இயல்பு. ஆணவத்தின் தடத்த லட்சணம் என்று இது அழைக்கப்படும்.

**7. ஆணவத்தின் செயற்பாடுகள் எத்தனை? அவற்றை விளக்கவும்.**

மேற்கூறப்பட்ட இரு நிலைகளில் நின்று உயிருக்கு இடர் செய்யும் ஆணவத்தின் செயற்பாடுகள் (காரியங்கள்) ஏழாக வகுக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு :

1. **மோகம்:** எமக்குள்ள அறிவின் துணையால் தீமை விளைவிப்பவற்றைத் தெளிவாக அறிகிறோம். ஆயினும் அவற்றைத் தவிர்க்காமல், அவற்றில் ஈடுபடுவதிலே விருப்பம் கொள்கிறோம். இது மோகம் எனப்படும்.

2. **மதம்:** தன்னைப் பற்றி உயர்வாகவும் தன் கொள்கைகளைச் சிறந்ததாகவும் எண்ணித் தற்பெருமை கொள்ளல் மதம் எனப்படும்.

3. **அராகம்:** ஒரு பொருள் கிடைக்காதென்று தெரிந்தும் அதனை அடைய ஆசைப்படுதல் அராகம் எனப்படும்.

4. **கவலை:** கிடைக்க வேண்டியது கிடைக்குமா கிடைக்காதா என்றும், செய்வதற்கேற்ற பலன் வருமா வராதா என்றும், உரிமையானவை என்றும் இருக்குமா நீங்குமா என்றும் எண்ணி மனம் வருந்துவது கவலை எனப்படும்.

5. **தாபம்:** வேண்டியவர் பிரிந்தபோதும் பிரிய நேரிடும் என்பதை எண்ணிய போதும் உண்டாகும் பிரிவாற்றாமை தாபம் எனப்படும்.

6. **வாட்டம்:** தாபத்தினால் உண்டாகும் வருத்தம் வாட்டம் எனப்படும்.

7. **விசித்திரம்:** எமது இன்பதுன்பத்துக்கு நாமே காரணமாக இருக்கிறோம். ஆயினும் அவற்றுக்குப் பிறரைக் குறை கூறுவது எமது இயல்பாக இருக்கிறது. இது விசித்திரம் (வேடிக்கை) எனப்படும்.



ஆணவத்தின் செயற்பாடுகளான இந்த ஏழும் வெவ்வேறு வகையில் உயிர்களைக் கட்டுப்படுத்து கின்றன.

**8. உயிர்கள் பல எனவும் உயிர்களின் ஆற்றல்கள் வெளிப்பட முடியாதவாறு ஆணவம் மறைக்கிறது எனவும் கூறப்படுகிறது. அவ்வாறாயின் ஆணவமும் பலவாக உள்ளதா?**

ஆணவத்தை இருளுக்கு ஒப்பிடுவதுண்டு. இருள் பல பொருட்களை மறைத்தாலும் அது ஒன்றுதான். அவ்வாறே ஆணவமும் பல உயிர்களின் ஆற்றலை மறைத்தாலும் அது ஒன்றே; பலவல்ல. உண்மையில் இருளைவிடக் கொடியது ஆணவம். இருள் பொருளை மறைத்தாலும் தன்னைக் காட்டுகிறது. இருளின் இருப்புத் தெரிகிறது. ஆனால் ஆணவம் உயிரின் ஆற்றலை மறைப்பதோடு தன்னையும் காட்டாது மறைக்கிறது.

**9. ஆணவம் அனாதியே உள்ளது என்பதால் அதற்குத் தோற்றமும் இல்லை, அழிவும் இல்லை. அப்படியாயின் முத்தியில் ஆணவம் அழிவது எங்ஙனம்?**

இறைவனைப் போலவும் உயிரைப் போலவும் ஆணவமும் அனாதியே உள்ள ஒன்றுதான். அதற்குத் தோற்றமும் அழிவும் இல்லை. உயிர் முத்தியடைந்த பொழுது அதற்குக் கட்டாக அமைந்த ஆணவத்தின் பிடி முற்றாக நீங்குகிறது. இதனால் உயிரின் ஆற்றல்கள் ஆணவத்தால் மறைக்கப்பட்ட நிலை அகன்றுவிடுகிறது. ஒளிக்குமுன் இருள் விலகுவதுபோல் சிவனின் திருவருளாகிய ஒளிக்குமுன் உயிருக்கு இருளாக

அமைந்த ஆணவத்தின் பிடி விலகுகிறது; ஆணவம் அழிவதில்லை.

**10. பிற சமயங்கள் ஆணவம் பற்றிப் பேசுகின்றனவா? இல்லையெனில், உயிரின் குறைகளை அவை எவ்வாறு விளக்குகின்றன?**

ஆணவம் என்ற ஒன்று இருப்பதாக சைவ சமயம் ஒன்றுதான் கூறுகிறது. பிற சமயங்கள் கூறுவதில்லை. இந்திய சமயங்கள் பல உயிரின் அறியாமை, தற்செருக்கு போன்றவை மாயை, கன்மம் ஆகியவற்றால் உண்டாகின்றன என விளக்குகின்றன. மாயையும் கன்மமும் உயிரின் செயலுக்குத் துணைபுரிந்து, அதன் மூலம் அனுபவம் பெறச் செய்து, அதன் மூலம் அறிவு பெறச் செய்கின்றன. ஆகவே இவற்றின் விளக்கம் ஏற்றுக்கொள்ளத்தக்கவையல்ல.

அன்னிய மதங்கள் சில எமது குறைகளுக்கு எமது மூதாதையர் எப்பவோ செய்த பாவமே (original sin) காரணம் என்கின்றன. யாரோ எப்பவோ செய்த பாவச் செயலின் காரணமாக இன்றுள்ளவரும் இனி வருபவரும் துன்பம் அனுபவிக்க நேரிடுகிறது என்பது அறிவியலுக்கு ஏற்றதல்ல. இதனைச் சைவம் ஏற்பதில்லை.

# 5. கன்மம் அல்லது வினை

**1. கன்மம் என்பது என்ன?**

கன்மம் அல்லது கர்மா என்றால் செயல் என்று பொருள். தமிழில் வினை என்று இது கூறப்படும். எமது செயல் ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய பலன் உண்டு. தத்துவத்துறையில் கன்மம் அல்லது வினை என்பது செயலையும் குறிக்கும்; செயலுக்குரிய பலனையும் குறிக்கும். சைவ சித்தாந்தத்தின்படி ஆணவம் போல் கன்மமும் அனாதியானது.

**2. வினைக்கொள்கை என்பது என்ன?**

ஒவ்வொரு செயலுக்கும் அதற்குரிய பலனுண்டு. அந்தப் பலனைச் செய்தவனே அனுபவிக்கவேண்டும். வினைக் கொள்கையின் சுருக்கமான விளக்கம் இது. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்', 'தினை விதைத்தவன் தினையறுப்பான், பனை விதைத்தவன் பனையறுப்பான்', போன்ற பழமொழிகள் வினை அல்லது கன்மக் கொள்கையை விளக்குவன.

எமது இன்ப துன்ப அனுபவங்கள் நாம் முன் செய்த நல்ல, தீய செயல்களின் பலனாக வருபவை. 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்ற சங்கநூற்றொடர் பண்டைத் தமிழ் மக்களின் அனுபவ உண்மையாக வந்து வினைக் கொள்கையை விளக்குகிறது.

**3. கன்மப் பலன் உயிரின் அனுபவத்திற்கு வருவது எப்படி?**

எமது எண்ணம், சொல், செயல் மூலம் நாம் வினை

செய்கிறோம். இவ்வாறு செய்யப்படும் வினை **ஆகாமியம்** எனப்படும். செய்கின்ற செயல் முடிந்தாலும் செயலின் பலன் முடிவுக்கு வருவதில்லை. நற்செயலின் (நல்வினையின்) பலன் புண்ணியமாகவும் தீச்செயலின் (தீவினையின்) பலன் பாவமாகவும் மாறி உயிருடன் சேர்ந்து பிறவிகள் தோறும் செல்கின்றன.

பல பிறவிகளில் செய்த வினைகளின் பலன்கள் பெரும் தொகையாக உயிரைத் தொடர்கின்றன. இவ்வினைத் தொகுதி **சஞ்சிதம்** எனப்படும். இதில் ஒரு பகுதி உயிர் எடுக்கும் ஒரு பிறவியில் அனுபவத்துக்கு வருகிறது. இங்ஙனம் உயிரின் அனுபவத்துக்கு வரும் வினை **பிராரப்தம்** எனப்படும். தமிழ் நூல்களில் இது **ஊழ்** என்று குறிக்கப்படுகிறது. குறிப்பிட்ட ஒரு பிறவியில் அனுபவத்துக்கு வராமல் மிகுதியாக இருக்கும் வினைத் தொகை அடுத்து வரும் பிறவிகளில் அனுபவத்துக்கு வரும்.

வினை அனுபவத்துக்கு வருவதற்கும் இன்னொரு வினை செய்ய வேண்டியுள்ளது. வினை செய்வதற்குத் தேவையான உடல், உடற் கருவிகள், உலகப் பொருட்கள் ஆகியவற்றை **மாயை** என்னும் நுண்பொருளிலிருந்து இறைவன் படைத்தளிக்கிறான். அனுபவத்துக்கு வர வேண்டிய வினைப்பலனையும், அதற்கு ஏற்ற இடம், காலம் முதலியவற்றையும் இறைவனே தீர்மானிக்கிறான்.

**4. வினைப் பயன் உயிரின் அனுபவத்திற்கு வருவதற்கு இறையருள் தேவையா? தேவை எனின், இறைவனை நம்பாத சமயங்கள் தரும் விளக்கம் என்ன?**



கடவுள் நம்பிக்கையற்ற சமணம், போன்ற மதங்களும் கன்மத்தை நம்புகின்றன. வினை தானாகச் சென்று செய்தவனைச் சேர்ந்து அனுபவத்துக்கு வரும்; அதைச் சேர்ப்பதற்கு ஒரு கடவுள் தேவை இல்லை என்று அவை கூறுகின்றன. இதனை விளக்க அவர்கள் காட்டும் பொதுவான உதாரணம் ஒன்று உண்டு. ஒரு பசுக்கன்று, பல பசுக்களின் கூட்டத்தில் தானாகச் சென்று தன் தாய்ப் பசுவையை இனங்கண்டு பாலருந்தும். இது போலவே வினையும் பல உயிர்களிடை தானாகவே சென்று அதனைச் செய்த உயிரைச் சேர்ந்து பலனுக்கு வரும் என்பது இச்சமயங்கள் தரும் விளக்கம்.

வினை, பசுக்கன்றைப் போலன்றி, அறிவற்ற ஒரு சடப்பொருள். அதனால் அது தானாகச் சென்று செய்தவனைச் சேரமாட்டாது. அதனைச் சேர்க்க முற்றறிவும் பேராற்றலும் கொண்ட இறைவன் ஒருவன் வேண்டும். இது சைவசமயம் தரும் விளக்கம்.

**5. ஒரு பிறவியில் ஒருவன் செய்த கன்மம் முழுவதும் அடுத்த பிறவியில் அனுபவத்துக்கு வருமா? அல்லது வேறொரு பிறவியில் அனுபவத்துக்கு வருமா? அனுபவத்துக்கு வரும் காலம் எது?**

ஒரு பிறவியில் செய்த கன்மம் முழுவதும் அந்தப் பிறவியிலோ அல்லது குறிப்பிட்ட ஒரு பிறவியிலோ அனுபவத்துக்கு வருவதில்லை. ஒரு நேரத்தில் ஓரிடத்தில் விதைத்த தானியங்கள் முழுவதும் ஒரே நேரத்தில் முளைவிடுவதில்லை. சில முந்தியும் சில பிந்தியும் முளைவிடுகின்றன. இது போன்றே கன்மம் அனுபவத்துக்கு வரும் முறையும் அமைந்துள்ளது. விதையின் தன்மை, விதைத்த நிலத்தின் தன்மை முதலியன விதை

முளைவிடும் காலத்தை நிர்ணயிக்கின்றன. இது போன்றே செய்த வினையின் மென்மை வன்மை ஆகிய தன்மை, வினை செய்ய வேண்டிய உடல், உடற்கருவிகளின் தன்மை ஆகியவற்றிற்கு ஏற்ப வினை அனுபவத்துக்கு வரும் காலம் நிர்ணயிக்கப்படுகிறது. உரிய காலமும் இடமும் 'காலம்', 'நியதி' ஆகிய தத்துவங்களின் அடிப்படையில் இறைவனாலேயே நிர்ணயிக்கப் படுகின்றன.

**6. இந்தப் பிறவியில் நாம் அனுபவிப்பவைகள் முற்பிறவிகளில் நாம் செய்த கன்மத்தின் பலனால் வந்தவை என்றால், மனித முயற்சிக்கு இடமில்லை என்றாகிறதல்லவா?**

வாழ்வியல் நிகழ்வுகள் கன்மத்தின் அடிப்படையில் நிகழ்வது உண்மை எனினும், மனித முயற்சிக்கும் இடமுண்டு. அதற்கேற்ற பலன் கிடைக்கிறது. இதனைப் பின்வரும் உதாரணம் மூலம் விளக்கலாம்.

சீட்டாட்டத்தில் ஒருவனுக்குக் குறிப்பிட்ட சில சீட்டுக்கள் கிடைக்கின்றன. இது அவனின் முயற்சிக்கு அப்பாற்பட்டது. அந்த சீட்டுக்களைப் பொறுத்தே ஆட்டத்தில் வெற்றி தோல்வியும் ஓரளவு அமைகின்றன. இது அவனின் வினைப்பயன் எனலாம். ஆனால், கிடைத்த சீட்டுக்களை வைத்து எப்படி ஆடி வெற்றி பெற வேண்டும் என்பது அவனின் முயற்சியைப் பொறுத்தது. அவனின் முயற்சிக்கேற்ற பலனை அவன் பெறுவான்.

கன்மத்துக்கும் மனித முயற்சிக்குமான தொடர்பை இன்னொரு உதாரணம் மூலமும் விளக்கலாம். ஒரு மரத்தில் கட்டபட்ட ஒரு பசுவுக்கு வெளியில் சென்று உணவு பெறும் சுதந்திரம் இல்லை. இது அதன் கன்மப் பலன் என்று கூறலாம். ஆனால் அதனைக் கட்டியுள்ள கயிற்றின் நீளத்துக்கு அமைய அது நடந்து செல்லும் வசதியுண்டு. அக்கயிற்றின் நீளத்தை ஆரமாகக் கொண்ட வட்டத்துக்குள் திரிந்து அது புல் மேய்ந்து உண்ணலாம். இது அதன் முயற்சியால் ஆவது.



ஆகவே ஊழ் வலிதாயினும் மனித முயற்சிக்கும் இடமுண்டு என்பதும், அதற்கேற்ற பலன் கிடைக்கும் என்பதும் பெறப்படும். இதனாலேயே 'ஊழிற் பெருவலி யாவுள' என்று கூறிய திருவள்ளுவர் 'முயற்சி திருவினை யாக்கும்' என்றும் கூறினார்.

**7. புண்ணியங்கள் பல செய்து எமது தீவினைப் பலனான பாவத்தைப் போக்க முடியாதா?**

நல்வினைப் பலன் *புண்ணியம்* என்றும் தீவினைப் பலன் *பாவம்* என்றும் கூறப்படும். இந்த இரண்டு பலன்களையும் நாம் அனுபவித்தே தீர்க்க வேண்டும். அதுவரை அவை எம்மைக் கட்டுப்படுத்துகின்றன. தீவினைப் பலனை இரும்பு விலங்குக்கும் (சங்கிலிக்கும்) நல்வினைப் பலனைப் பொன்விலங்குக்கும் ஒப்பிடுதல் உண்டு. ஒன்றை இன்னொன்றினால் போக்க முடியாது.

நல்வினை செய்பவன் பொதுவாக "நான் செய்கிறேன்; எனது புண்ணிச் செயல்'' என்று தற்செருக்குடன் செய்கிறான். இதுவும் தீவினை செய்தல் போல் ஆணவச் சேர்க்கையால் வந்ததே. இதனாற்றான் இது பொன் விலங்குக்கு ஒப்பிடப்படுகிறது.

**8. கடவுள் அல்லது குருவின் அருளால் கன்மத்தை வெல்ல முடியாதா?**

தான் செய்ததைத் தானே அனுபவிக்க வேண்டு மென்ற நியதி எல்லோருக்கும் பொதுவான ஒன்று. ஆயினும், ஆன்மீக வளர்ச்சியுற்ற ஞானிகள் வாழ்வில் இந்த நியதிக்கு விதி விலக்கான சந்தர்ப்பங்களையும் காணமுடிகிறது. மாணிக்கவாசக சுவாமிகள் போன்றவர்களின் வாழ்வுப் பாதை இறையருளால் மாற்றமடைந்துள்ளது. சிவ ஞானிகளான நாயன்மார்கள் பல அற்புதங்கள் செய்து கன்மத்தை மாற்றியுள்ளார். அண்மைக் காலத்தில் இரமண மகரிஷி, சிவயோக சுவாமிகள் போன்ற சிலர் இறையருளின் துணையுடன் பலரின் நோய் பிணி தீர்த்தும் இடர்கள கற்றியும் அற்புதங்கள் செய்துள்ளனர். ஆயினும் இறுதிக் காலத்தில் வந்த இவர்களின் நோயை இவர்களாலே மாற்ற முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஞானிகள் கூட தமது கன்மத்தை தாமே அனுபவிக்க வேண்டும் என்பதை இது உணர்த்துவதாக உள்ளது.

**9. உயிர்கள் இடைவிடாது செயல் புரிந்து கொண்டே இருக்கின்றன. இங்ஙனமாக, உயிரின் முன்வினை அனுபவத்திற்கு வருவதும், புதிய வினை உண்டாவதும் இடைவிடாது நடைபெறுகிற தென்றே கொள்ளவேண்டுமல்லவா?**

வினைப் பயன் அனுபவமாதற்கு புதிய வினை அல்லது முயற்சி தேவைப்படுகிறது. இந்தப் புதிய வினை மூலம் முன் செய்த வினை இன்ப துன்ப அனுபவமாகி அழிகிறது. ஆனால் புதிய வினைக்குரிய பலன்கள் உருவாகி, அவையும் அனுபவத்திற்கு வருகின்றன. இங்ஙனம் ஒரு வினை அனுபவத்திற்கு வந்து அழியும் போது, அதிலிருந்து புதிய வினைகள் தோன்றுகின்றன. இங்ஙனம் வினையின் அழிவும் தோற்றமும் (நாசமும் உற்பத்தியும்) தொடர்ந்து வருவதால் வினையின் இந்தத் தன்மை *நாசோற்பதி* என்று கூறப்படும்.

ஆற்றிலே ஒரு இடத்திலுள்ள நீர் ஓடிப்போக அந்த இடத்துக்குப் புதிய நீர் வருவதும், அதுவும் ஓடிப்போக மீண்டும் புதிய நீர் வருவதுமாக நீரோட்டம் இடைவிடாமல் நடைபெறுகின்றது. ஆயினும் அந்த இடத்தில் ஆறு நிலைத்திருப்பது போல் தோன்றுகின்றது. வினையின் தன்மையும் இவ்வாறு இருத்தலால் அது *பிரவாக நிமித்தம்* எனப்படுகிறது.



**10. வினைப்பலன் தீர்வதற்கு புதிய பிறவியும், அதனால் புதிய வினைப்பலனும் என்று வினையும் பிறவியும் ஒன்றன் பின் ஒன்றாக நீண்டு கொண்டே வருகின்றன. இதற்கு ஒரு முடிவில்லையா?**

வினைப்பலன் அனுபவத்திற்கு வந்து தீர்வதற்கு பிறவி எடுக்க வேண்டியுள்ளது. எடுத்த பிறவியில் செய்யும் வினையின் பலனை அனுபவிப்பதற்கு இன்னொரு பிறவி தேவைப்படுகிறது. இங்ஙனம் வினையினால் பிறவி, பிறவியால் வினை என்று வினையும் பிறவியும் சங்கிலித் தொடர்போல் நீள்கின்றன. ஆயினும் நாம் செய்யும் வினையால் அனுபவமும், அனுபவத்தினால் அறிவு வளர்ச்சியும் பெறுகிறோம். அறிவு வளர வளர உயிரைப் பற்றிய ஆணவத்தின் பிடி சிறிது சிறிதாக நீங்குகிறது. ஆணவப்பிடி நீங்கியதும் இறையருளுக்குப் பாத்திரமாகிறோம். அப்பொழுது எமது செயல்கள் ஆணவத்தினால் உந்தப் படாமல் இறையருளால் உந்தப்படுகின்றன. ஆணவச் சேர்க்கையற்ற இச் செயல்களின் பலன்கள் எம்மைத் தொடர்வதில்லை. இதனால் இறப்பு பிறப்பு என்னும் சுழற்சியிலிருந்து விடுபடுகிறோம்.

# 6. மாயை

**1. மாயை என்பது என்ன?**

உலகப் பொருட்களுக்கு மூலமாக இருக்கும் ஒரு நுண்பொருள் மாயை. எமது உடம்பு, அதன் உறுப்புக்கள், அதனுள்ளிருக்கும் மனம் முதலிய கருவிகள், நாம் காணும் உலகப் பொருட்கள், பிரபஞ்சத்திலுள்ள உலகங்கள் அனைத்தும் மாயையிலிருந்தே தோன்றுகின்றன.

**2. மாயை என்பது பொய்த் தோற்றமல்லவா?**

மாயை என்பது பொய்த் தோற்றமல்ல. இந்திய தத்துவங்கள் சில அதனைப் பொய்த்தோற்றம் என்று கூறுகின்றன. சைவசித்தாந்தம் கூறும் மாயை அப்படியல்ல. இறைவன், உயிர் போன்று மாயையும் என்றுமுள்ள ஒன்றே.

**3. பிறப்பு, இறப்பு ஆகியவற்றுடன் மாயை எங்ஙனம் தொடர்புடையது?**

பொருள் சக்தியாகவும் சக்தி பொருளாகவும் மாறும் என்பது ஒரு விஞ்ஞான உண்மை. உலகம், உலகப் பொருட்கள் குறித்த சைவ சித்தாந்தக் கொள்கையும் இத்தகையதே.

உடம்பும் உடற் கருவிகளும் மாயையிலிருந்து இறைவனால் படைக்கப்பட்டு உயிருக்குச் கொடுக்கப் படுகின்றன. இது பிறப்பு என்று கூறப்படுகின்றது. இறக்கும் பொழுது இவை திரும்பவும் மாயையாக மாறுகின்றன. ஆகவே பிறப்பு இறப்பு என்பன மாயை உடம்பு போன்ற பொருட்களாக மாறுவதும், அவை பின்னர் மாயையாக மாறுவதுமே ஆகும். அவை நிலை மாற்றங்களே. இக்கொள்கை **சற்காரியவாதம்** என்று சைவ சித்தாந்தத்தில் கொள்ளப்படும்.

உயிர்கள் பிறந்திறப்பதில்லை. அவை என்றுமுள்ளவை. பிறப்பும் இறப்பும் உடலைப் பற்றியனவே.

**4. சற்காரியவாதம் என்பதன் பொருள் என்ன?**

சற்காரியவாதம் என்பது சைவ சித்தாந்தத்தின் ஒரு அடிப்படைக் கொள்கை. சற்காரியவாதம் என்ற சொல், சத், காரியம், வாதம் என்னும் மூன்று சொற்களால் ஆனது. சத் (சத்து) என்பது மாற்றமடையாமல் என்றுமிருக்கும் ஒரு உள்பொருள். காரியம் என்பது ஒன்றின் செயற்பாடாக வந்தது. வாதம் என்பது கொள்கை. இதன்படி உள்ளது தான் தோன்றும். இதனால் இல்லது தோன்றாது என்பது பெறப்படும்.

உள்ளதான மாயையிலிருந்துதான் எமது உடம்பும் உலகப் பொருட்களும் தோன்றுகின்றன. இல்லாத ஒன்றிலிருந்து(வெறுமையிலிருந்து)எதுவும்தோன்றுவதில்லை. மாயை என்ற சொல்லே இதனை உணர்த்துவதாக உள்ளது. இச்சொல்லை மா, யா என்றும், மாய், ஆ என்றும் பிரித்துப் பொருள் காணுவதுண்டு. மா அல்லது மாய் என்றால் ஒடுங்குதல் (மாய்தல்). யா அல்லது ஆ என்றால் தோன்றுதல் (ஆதல்). இதனால் பொருட்களின் தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் (அழிவிற்கும்) மூலமாக இருப்பது மாயை என்பது உணரப்படுகிறது. முற்றழிவுக் காலத்தில் (பிரளய காலத்தில்) அனைத்தும் மாயையில் ஒடுங்கிப் பின் அதிலிருந்து தோன்றுகின்றன.

**5. மாயையிலிருந்து பொருட்கள் தோன்றி அழிவது எப்படி?**

மண்ணிலிருந்து குயவன் பானை, சட்டிகளைப் படைப்பதுபோல், மாயையிலிருந்து இறைவன் உடம்பை உள்ளடக்கிய அனைத்துப் பொருட்களையும் படைக்கிறான். பானை காரியமாவதற்கு முதற்காரணம் (மூல காரணம்) மண். அதன் உரு ஆக்கத்திற்குத் துணையாக இருப்பது திரிகை. இது துணைக்காரணம். குயவனும் ஒரு காரணம். அவன் நிமித்த காரணம். இதே போல், உலகம் காரியவமாவதற்கு முதற்காரணம் மாயை; துணைக் காரணம் சிவசக்தி; நிமித்த காரணம் சிவன்.

உயிரின் செயற்பாடுகளுக்கு உடம்பும் மனம் முதலிய உடற்கருவிகளும் தேவை. இவை முறையே தனு, கரணம் எனப்படும். உயிர் எடுத்த உடம்பு நின்று செயற்படுவதற்கு உலகம் தேவை. இது புவனம் எனப்படும். உயிரின் செயல்கள் அனுபவத்திற்கு வந்து பலன் தருவதற்கு அனுபவப் பொருட்கள் தேவை. இவை போகம் எனப்படும். **தனு கரண புவன போகம்** ஆகியவற்றை இறைவன் மாயையிலிருந்து படைத்து அளிக்கிறான். குயவனால் மண்ணிலிருந்து படைக்கப் பட்ட பானை முதலிய பாண்டங்கள் அழியும் பொழுது திரும்பவும் மண்ணாக மாறுவதுபோல், இறைவனால் மாயையிலிருந்து படைக்கப்பட்டவைகள் அழியும் பொழுது மாயையாக மாறுகின்றன.

**6. மாயையைச் சுத்தமாயை அசுத்தமாயை என்று இரண்டாகக் கூறுவதுண்டு. இது குறித்த விளக்கம் என்ன?**



மாயை ஒன்றுதான். அதன் செயற்பாட்டின் அடிப்படையில் அதனை *சுத்தமாயை, அசுத்தமாயை* என்று இரண்டாக வகுத்துள்ளார். ஆணவத்துடன் சேர்ந்திருக்கும் போது மாயை மயக்க உணர்வையும் தவறான எண்ணத்தையும் உண்டு பண்ணுகிறது. இந்த நிலையில் அது அசுத்தமாயை எனப்படுகிறது. அசுத்த மாயை ஆசையை உண்டு பண்ணி மோகத்துக்குக் காரணமாகிறது. இதனால் இதனை *மோக காரணி* என்று கூறுவதுமுண்டு. ஆணவச் சேர்க்கை இல்லாத நிலையில் உள்ளது சுத்தமாயை. இந்த நிலையில் அது மோகத்தை உண்டாக்குவதில்லை. இதனால் அது *அமோக காரணி* எனப்படுகிறது.

**7. மாயா காரியங்கள் என்பவை என்ன?**

மாயையின் செயற்பாட்டால் தோன்றுபவை மாயா காரியங்கள். மாயை இருவகை உலகமாகக் காரியப் படுகிறது. *சொல்லுலகம், பொருளுலகம்* என்பவை இவை. இவை முறையே *சப்தப் பிரபஞ்சம், அர்த்தப் பிரபஞ்சம்* என வடமொழியில் கூறப்படுகின்றன. *மொழி, வாக்கு* என்றும் சொல்லுலகம் குறிக்கப்படுகிறது.

சொல்லுலகம் *மந்திரம், பதம், வன்னம்* என மூன்று கூறுகளை உடையது. பொருளுலகம் *தத்துவம், கலை, புவனம்* என்னும் மூன்று கூறுகளை உடையது. இந்த ஆறு கூறுகளும் உயிர்களின் ஆன்மீக வளர்ச்சியில் முக்கிய பங்கெடுக்கும் வழிகளாகும். இதனால் இவை *அத்துவாக்கள்* எனப்படுகின்றன. அத்துவா என்றால் வழி என்பது பொருள்.

**8. வாக்கு எவ்வாறு வெளிவருகிறது?**

நாம் ஒன்றைச் சொல்லும் பொழுது, அச்சொல் அல்லது சொற்றொடர் முதலில் எமக்குள் (உள்ளத்தில்) உருவாகிறது. அந்நிலையில் அதனை உள்மொழி என்று கூறலாம். இங்ஙனம் உருவான மொழி வெளிவரும் பொழுது மூன்று நிலைகளில் விருத்தியாவதாக சாத்திர நூல்களில் கூறப்பட்டுள்ளன.

இங்ஙனம் விருத்தியடைந்து வெளிவரும் மொழி அல்லது வாக்கு அதன் முதல் நிலையான காரண நிலையில் *சூக்குமை வாக்கு* எனப்படுகிறது. இது மிகவும் நுண்மையாக (சூக்குமமாக) இருக்கிறது. *நாதம், பறை* என்ற பெயர்களாலும் சூக்குமை வாக்கு அழைக்கப்படும். சூக்குமை வாக்கு சொல்லவும் கேட்கவும் படாமல் மிகவும் நுண்மையாக இருக்கும். இது பருநிலை அடைந்து வளர்ச்சியுற்ற பின்பே சொல்லவும் கேட்கவும் கூடியதாக இருக்கும்.

இதன் வளர்ச்சியில் முதலாவது நிலை *பைசந்தி வாக்கு* எனப்படும். பைசந்தி (பஸ்யந்தி) என்றால் விளங்குவது என்பது பொருள். விளங்காமல் இருக்கும் சூக்குமை என்ற முதல் நிலையிலிருந்து பைசந்தி என்ற இரண்டாவது நிலைக்கு வாக்கு வளர்ச்சியடைகிறது. இந்நிலையில் வாக்கின் வடிவம் நன்கு புலப்படாமல் ஓரளவு விளங்கியும் விளாங்கமலும் உள்ளது. இதற்கு உதாரணமாக மயில் முட்டையிலுள்ள நீரைக் கூறுவதுண்டு. அதில் பல்வகை நிறங்கள் இன்னவை என்று விளங்காமல் இருக்கும்.

பைசந்தி வாக்கு விருத்தியடைந்த நிலையில் *மத்திமை வாக்கு* எனப்படும். இதில் வாக்கு முழு உருவத்தைக் கொண்டு இருக்கும். சொற்கள் விளங்கித் தோன்றும்; ஆனால் சொல்பவனது குரல் அடியில், வெளியே சொல்லவும் கேட்கவும் படாத நிலையில் இது உள்ளது. வாக்கின் வளர்ச்சியில் மூன்றாவது நிலை மத்திமை.



மததிமை வாக்கு விருத்தியடைந்து *வைகிரி வாக்கு* எனப்பெயர் பெற்று நிற்கும். வைகரி என்றால் விகாரப்படுவது (ஒலிக் கூறுகளாகச் சிதறி வருவது) என்பது பொருள். இது வாக்கின் வளர்ச்சியின் நான்காவது நிலை. வைகரி வாக்கை இரண்டாகப் பகுத்துக் கூறுவதுமுண்டு. தன் செவிக்கு மட்டும் கேட்கும் நிலையில் சூக்குமவைகிரி என்றும், பிறர் செவிக்கும் கேட்கும் நிலையில் தூலவைகரி என்றும் கூறப்படும்.

ஆகவே சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்ற ஒழுங்குமுறையில் வாக்கு விருத்தியடைகிறது. இவை நால்வகை வாக்கு எனப்படும்.

**9. நால்வகை வாக்கு சுத்தமாயையிலிருந்தா அசுத்த மாயையிலிருந்தா தோன்றுகிறது?**

வாக்குகள் யாவும் சுத்த மாயையிலுள்ள நாதத்தின் விருத்தியாக வருவன. இதனால் இவை சுத்த மாயையின் காரியமாய்த் தோன்றுகின்றன. வாக்கு எனப்படும் சொல்லுலகம் சுத்தமாயா காரியமே.

**10. சொல்லுலகத்திலுள்ள மந்திரம், பதம், வன்னம் என்பவற்றின் பொருள் என்ன?**

மந்திரம் என்பது எழுத்துகளாலான ஒரு தொடர் அல்லது சொல். 'நமசிவய' என்ற மந்திரம் ஐந்தெழுத்துக் களாலான ஒரு சொல். பதம் என்பது சொல்லின்

பொருளைக் கொண்டது. 'நமசிவய' என்பதில் *திரோதானம், மலம், சிவன், அருள், உயிர்* ஆகிய பொருள்கள் உள்ளன. இதனால் இவை *பதம்* எனப்படும். 'அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி', என்ற திருமுறைத் தொடர் இதனைக் குறிப்பதாக உள்ளது. வன்னம் என்பது சொல்லிலுள்ள எழுத்து. நமசிவய என்பதில் ஐந்து எழுத்துக்கள் (வன்னங்கள்) உள்ளன. இதனால் இது திருவைந்தெழுத்து எனப்படுகிறது.

**11. தத்துவம் என்பதன் பொருள் என்ன?**

மாயையின் காரியமாகக் கொள்ளப்படும் 'தத்துவம்' என்பது 'மூலமாக உள்ள பொருள்' என்று பொருள் தரும். தனு கரண புவன போகங்கள் மாயையிலிருந்து தோன்றும் போது முதலில் தத்துவங்களாகத் தோன்றுகின்றன. தத்துவங்கள் உலகப் பொருட்களுக்கு மூலமானவை.

**12. சைவத்தில் சொல்லப்படும் தத்துவங்கள் எத்தனை?**

சுத்த மாயையின் காரியமாக ஐந்து தத்துவங்களும் அசுத்த மாயையின் காரியமாக ஏழு தத்துவங்களும் உள்ளன. இவை முறையே *சிவதத்துவங்கள்* என்றும் *வித்தியாதத்துவங்கள்* என்றும் கூறப்படும். வித்தியாதத்துவங்களில் ஒன்றான கலை என்னும் தத்துவத்திலிருந்து பிரகிருதிமாயா தத்துவங்கள் என இருபத்தினான்கு தோன்றும். இவை *ஆன்ம தத்துவங்கள்* என்றும் கூறப்படும். சைவ சித்தாந்தம் ஒன்றுதான் இந்த முப்பத்தாறு தத்துவங்கள் பற்றிக் கூறுகிறது. மற்றைய தத்துவங்கள் பிரகிருதி மாயா தத்துவங்கள் இருபத்திநான்கைப் பற்றியே கூறுகின்றன.



**13. முப்பத்தாறு தத்துவங்களையும் பெயரிடுக?**

1. *சுத்தமாயா தத்துவங்கள் (சிவ தத்துவம்)* - 5

நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை

2. *அசுத்த மாயா தத்துவங்கள் (வித்தியா தத்துவம்)* - 7

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை

3. *பிரகிருதிமாயா தத்துவங்கள் (ஆன்ம தத்துவம்)* - 24

i. *அந்தக்கரணம்* (4)

மனம், புத்தி, அகங்காரம், சித்தம்

ii. *கன்மேந்திரியம்* (5)

வாய் (வாக்கு), கால் (பாதம்), கை (பாணி), எருவாய் (பாயு) கருவாய் (உபத்தம்)

iii. *ஞானேந்திரியம்* (5)

செவி (சுரோத்திரம்), கண் (சட்சு), நாக்கு (சிங்குவை, தாலு), மூக்கு (ஆக்கிராணம்), தோல் (துவக்கு).

iv. *தன்மாத்திரை* (5)

நாற்றம் (கந்தம்), சுவை (இரதம்), ஒளி (ரூபம்), ஊறு (ஸ்பரிசம்), ஓசை (சப்தம்)

v. *பூதங்கள்* (5)

நிலம் (பிருதிவி), நீர் (அப்பு), தீ (தேயு), காற்று (வாயு), வெளி (ஆகாயம்)

**14. பொருளுலகைச் சேர்ந்த தத்துவங்கள் பற்றிக் கூறப்பட்டது. அதில் வரும் கலை குறித்த விளக்கம் என்ன?**

அதில் வரும் *கலை* இறையருள் தொழிற்படும் நிலையோடு தொடர்புடையது. இது தத்துவங்களில் வரும் கலையல்ல. சிவனின் அருட்சக்தி முப்பத்தாறு தத்துவங்களிலும் வியாபித்து நின்று ஆன்மாக்கள் உய்தி பெற உதவுகிறது. இவ்வியாபகம் ஐந்து நிலைகளில் நிற்கிறது. இந்த ஐந்தையும் ஐந்து கலைகளாகச் சொல்வர். இவை *நிவர்த்தி கலை, பிரதிட்டாகலை, வித்தியா கலை, சாந்தி கலை, சாந்தியதீத கலை* எனப்படும். பஞ்ச கலைகள் எனப்படும் இந்த ஐந்து கலைகள் ஒவ்வொன்றும் பின்வரும் முறையில் தத்துவங்களுடன் விரவி நிற்கும்.

1. நிவிர்த்தி கலை - மண் (பிருதிவி) தத்துவம் - 1
2. பிரதிட்டா கலை - ஆன்ம தத்துவத்தில் மண் நீங்கலாக மற்றைய தத்துவங்கள் - 23
3. வித்தியா கலை - வித்தியா தத்துவங்கள் - 7
4. சாந்தி கலை - சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை - 3
5. சாந்தியதீத கலை - சிவம் (நாதம்), சக்தி (விந்து) - 2

**15. பொருளுலகில் உள்ள தத்துவமும் கலையும் கூறப்பட்டன. மூன்றாவதாகிய புவனம் குறித்த விளக்கம் என்ன?**

**புவனம்** என்றால் உலகம் என்பது பொருள். உயிர்கள் தங்கியிருக்கும் இடங்களைக் குறிப்பன புவனங்கள்.

ஆன்மாக்கள் மூன்று வகை என முன்னர் படித்தோம். விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்கு ஆணவப் பிடிப்பு மென்மையாக இருக்கும். பிரளயாகலர் ஆன்மாக்களுக்கு சிறிது கூடுதலாக இருக்கும். சகலர் வகை ஆன்மாக்களுக்கு மிகவும் கூடுதலாக இருக்கும். இந்த மூன்று வகை ஆன்மாக்களும் போகத்தில் செயற்பட மூன்று வகை உலகம் தேவைப் படுகிறது. மாயை சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என மூவகையாகப் பிரிந்து மூவகை உலகங்கள் தோன்றக் காரணமாகின்றது.

மாயையின் ஒரு பகுதியில் இறையருள் முனைப்புடன் பதிகிறது. இப்பகுதி சுத்தமாயை எனப்படும். இது சிவதத்துவம் எனவும் கூறப்படும். இதில் தோன்றுவது விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்கான சுத்தமாயா உலகம் (புவனம்). இறையருள் சிறிது குறைவாக முனைத்து நிற்கும் பகுதி அசுத்தமாயை எனப்படும் வித்தியா தத்துவம். இதில் தோன்றுவது பிரளயாகலருக்கான அசுத்தமாயா உலகம். இறையருள் மிகவும் குறைவாக முனைத்து நிற்கும் பகுதி பிரகிருதிமாயை எனப்படும் ஆன்மதத்துவம். இதில் தோன்றுவது சகலருக்கான பிரகிருதி மாயா உலகம். நாங்கள் சகலர் வகை ஆன்மாக்கள்.

**16. மேற் கூறப்பட்ட மூவகைப் புவனங்கள் ஆன்மாக்களின் தேவை குறித்து அமைந்தன என்பதை அறிகிறோம். இவற்றில் இறைவனின் செயற்பாடு எத்தகையது?**

சுத்தமாயா புவனத்தில் நின்று இறைவன் மூன்று வகையான திருமேனிகளுடன் ஐந்தொழில் செய்கிறான். சிவமும் சக்தியுமான அருவத் திருமேனி *இலயத் திருமேனி* எனப்படும். இலயம் என்பது ஒடுங்கிய நிலையைக் குறிப்பது. சதாசிவன் கொண்ட அருவுருவத் திருமேனி *போகத் திருமேனி* எனப்படும். சதாசிவன் ஆன்மாக்களுக்கு சிவபோகத்தைக் கொடுத்து அருள்புரிவதால் அவனின் வடிவம் போகத் திருமேனி எனப்படுகிறது. இலயம், போகம் ஆகிய இரண்டுடன், அவன் கொண்ட மூன்றாவது

திருமேனி *அதிகாரத் திருமேனி* எனப்படும். இதில் அவன் மகேசுவரன், உருத்திரன், மால், அயனாக நின்று மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் ஆகிய அருட்செயல்களைச் செய்கிறான்.

சுத்தமாயா புவனத்தில் சிவபெருமான் நேரடியாக ஐந்தொழில் புரிகிறான். அசுத்தமாயா புவனத்தில் அநந்தேசுவரரை அதிட்டித்து நின்று இவற்றைச் செய்கிறான். இவர் வித்தியேசுவரர் என்றும் கூறப்படுவர். இவர் விஞ்ஞானகலர் ஆன்மாக்களில் ஒருவர். பிரகிருதி மாயா புவனத்தில் சீகண்டருத்திரரை அதிட்டடித்து நின்று இவற்றைச் செய்கிறான். சீகண்டருத்திரர் பிரளயாகலர் ஆன்மாக்களுள் உயர் நிலை பெற்றவர். “அதிட்டித்து நின்று” என்பது ‘நிலைக்களமாகக் கொண்டு’ என்ற பொருள் தரும்.

**17. அத்துவாக்களின் முக்கியத்துவம் என்ன?**

உயிர்களுக்கு வினை சேரும் வழிகளாக இருப்பவை அத்துவாக்கள். அத்துவா என்றால் வழி என்பது பொருள். சொல்லுலகில் உள்ள மந்திரம், பதம், வன்னம் ஆகிய மூன்றும் பொருளுலகில் உள்ள தத்துவம், கலை, புவனம் ஆகிய மூன்றும் அத்துவாக்கள். வினை சேர்வதற்கு இந்த ஆறு அத்துவாக்களும் வழி ஆதல் போல, உயிரின் வளர்ச்சியில் மலபந்தம் நீங்குவதற்கும் இவை வழிகளாக உள்ளன.

நிர்வாண தீட்சையில் அந்துவாசுத்தி என்று ஒரு முக்கியமான நிகழ்ச்சி இடம் பெறும். இதனால் உயிருக்கு மேலும் வினை ஏறாமலும் அனுபவத்திற்கு வராமலும் இருக்கும் நிலை உண்டாகும்.

# 7. தத்துவங்களின் தோற்றமும் செயற்பாடும்

**1. சுத்தமாயா தத்துவங்கள் எப்படித் தோன்றுகின்றன?**

இறைவனின் சக்தி ஞானம், கிரியை, இச்சை என மூன்றாக நிற்கிறது. இறைவன் தனது சக்தியைச் சுத்தமாயையில் செலுத்தும் பொழுது ஞானமும், கிரியையும் தனித்தும், சம அளவிலும், கூடிக் குறைந்தும் இருக்கும். இச்சா சக்தி ஒரே தன்மையாக இருக்கும்.

ஞானசக்தியைச் சுத்தமாயையில் செலுத்தும் பொழுது, அதில் ஒரு அசைவு உண்டாகும். இதிலிருந்து தோன்றுவது *நாத தத்துவம்.* இது *சிவ தத்துவம்* எனவும் கூறப்படும். கிரியா சக்தியைச் செலுத்தும் பொழுது அதனிடத்து ஒரு சுழற்சி தோன்றும். அது *விந்து தத்துவம்.* இது *சக்தி தத்துவம்* எனவும் சொல்லப்படும். சுத்தமாயையில் ஞானமும் கிரியையும் சம அளவில் தொழிற்படும் பொழுது தோன்றுவது *சதாசிவ தத்துவம்.* இத்தத்துவம் சாதாக்கியம் எனவும் கூறப்படும். சாதாக்கிய தத்துவத்தில் நின்றே இறைவன் அதன் கீழுள்ள தத்துவங்களை இயக்குகிறான். இறைவனின் கிரியா சக்தி கூடியும் ஞானசக்தி குறைந்தும் செயற்படும்போது *ஈசுவரம்* என்னும் தத்துவம் தோன்றும். ஞானசக்தி கூடியும் கிரியாசக்தி குறைந்தும் இருக்கும் போது *சுத்தவித்தை* தோன்றும். இவ்விரண்டு தத்துவங்களும் கீழுள்ள தத்துவங்களை இயக்கும்.

**2. அசுத்த மாயா தத்துவங்கள் எப்படித் தோன்றுகின்றன?**

சுத்தமாயா தத்துவங்கள் சிவனால் தோற்றுவிக்கப் படுகின்றன. அசுத்தமாயா தத்துவங்களை அநந்ததேவரை அதிட்டித்து நின்று சிவன் தோற்றுவிக்கிறான்.

மேலே கூறப்பட்ட சிவ தத்துவம் (நாத தத்துவம்) மாயையை எழுப்பும். இந்த மாயை அசுத்தமாயா காரியமான ஏழு தத்துவங்களில் ஒன்றான மாயை என்பது கவனத்துக்குரியது. சக்தி தத்துவம் *காலம், நியதி, கலை* ஆகிய மூன்றையும் எழுப்பும். சாதாக்கிய தத்துவம் *புருடனை* எழுப்பும். ஈசுவரம் *அராகத்தை* எழுப்பும். சுத்தவித்தை *வித்தையை* எழுப்பும்.

இவ்வேழு தத்துவங்களில் காலம், நியதி, கலை ஆகியவை மாயையிலிருந்து தோன்றுகின்றன. கலையிலிருந்து வித்தையும், வித்தையிலிருந்து அராகமும் தோன்றுகின்றன. புருட தத்துவம் என்பது காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய ஐந்து தத்துவங்களின் கூட்டாக உள்ளது. இது ஒரு தனித்தத்துவமல்ல.

இத்தத்துவங்கள் சிவன் வழி நிற்கும் வித்தியேசுவரர் ஆகிய அனந்தேசுவரரால் காரியப்படுத்தப் படுவதால் *வித்தியா தத்துவம்* எனப்படுகிறது.

**3. பிரகிருதி மாயா தத்துவங்கள் எப்படித் தோன்றுகின்றன?**

சீகண்டருத்திரரை அதிட்டித்து நின்று இறைவன் *பிரகிருதிமாயா தத்துவத்தைத்* தோற்றுவிக்கிறார். சீகண்டருத்திரர் ஆன்ம வர்க்கத்தில் உயர்பதம் அடைந்தவர். ஆன்மவர்க்கத்தைச் சேர்ந்த இவரால் இயக்கப் படுவதால் பிரகிருதி மாயை *ஆன்மதத்துவம்* எனவும் கூறப்படுகிறது.



வித்தியா தத்துவத்திலுள்ள கலையிலிருந்து *பிரகிருதி* தோன்றும். இதனை *மூலப் பிரகிருதி* என்றும் சொல்வர்.

**4. பிரகிருதி என்பதன் விளக்கம் என்ன?**

**பிரகிருதி** என்பது இயற்கை எனப் பொருள் தரும். பிரகிருதி அல்லது மூலப்பிரகிருதியின் வடிவம் குணம். இது *சாத்துவிகம், இராசதம், தாமசம்* என மூன்று குணங்களின் வடிவமாக நிற்கும். பிரகிருதி மாயா தத்துவங்கள் முக்குணங்களின் தன்மையைக் கொண்டு இருப்பன. பிரகிருதிக்கு **மான்** என்றும் ஒரு பெயருண்டு.

**5. பிரகிருதியிலிருந்து தோன்றும் தத்துவங்கள் பற்றிக் கூறுக.**

கலையிலிருந்து மூலப் பிரகிருதி தோன்றுமென அறிந்தோம். இப்பிரகிருதியில் முக்குணங்களும் வெளிப் படாமல் அடங்கி இருக்கும். முக்குணங்களும் வெளிப் பட்டுச் சமமாக நிற்கும் நிலையில் மூலப் பிரகிருதி *குண தத்துவம்* எனப் பெயர் பெறும். சில நூல்களில் குண தத்துவம் என்பது முப்பத்தாறு தத்துவங்களில் ஒன்றாகக் காட்டப்பட்டுள்ளது. பல நூல்களில் இது காட்டப்பட வில்லை. *சித்தம்* என்பது குணம் மயமாக, குண தத்துவமாக இருக்கிறது. இதனால் குண தத்துவத்துக்குப் பதிலாக **சித்தம்** ஒரு தத்துவமாகக் கொள்ளப்படுகிறது. குண தத்துவத்தைக் கொள்பவர்கள், சித்தத்தை மனம் என்னும் தத்துவத்தில் அடக்குகிறார்கள்.

சித்தம் என்னும் (குண) தத்துவத்திலிருந்து *புத்தி* தத்துவமும், புத்தியிலிருந்து *அகங்காரம்* எனும் தத்துவமும் தோன்றும். அகங்காரம், முக்குணங்களின் ஏற்றத்

தாழ்வுக்கேற்ப, *தைசதம், வைகரி, பூதாதி* என மூன்று வகையாக நிற்கும்.

தைசதம் என்றால் ஒளியுடையது என்பது பொருள். சாத்துவீக குணம் அதிகமாக உள்ளது தைசத அகங்காரம். இதிலிருந்து *மனம்* எனும் தத்துவமும், கண், காது முதலிய *ஞானேந்திரியங்களும்* தோன்றுகின்றன.

வைகரி என்றால் விகாரப்படுவது என்பது பொருள். இராசத குணம் அதிகம் உடையது வைகரி அகங்காரம். இதிலிருந்து கை, கால் முதலிய *கன்மேந்திரியங்கள்* தோன்றுகின்றன.

பூதாதி அகங்காரம் தாமத குணம் அதிகம் உடையது. இதிலிருந்து சுவை, ஒளி முதலிய *தன்மாத்திரைகளும்,* தன்மாத்திரைகளிலிருந்து நிலம், நீர் முதலிய ஐந்து *பூதங்களும்* தோன்றுகின்றன. தன்மாத்திரைகள் என்பன ஐம்பூதங்களின் நுண்ணிய நிலையைக் குறிப்பதாய், அவற்றின் குணத்தை அடக்குவதாய் உள்ளன.

**6. இத்தத்துவங்களால் உயிர் பெறும் பொதுவான பயன் என்ன?**

சுத்தமாயா தத்துவங்கள் ஐந்தும் அவற்றுக்குக் கீழே உள்ள அசுத்தமாயா தத்துவங்களைச் செலுத்துவதால், அவை *பிரேரக காண்டம்* எனப்படும். பிரேரித்தல் என்ற சொல் செலுத்துதல் என்ற பொருள் தருகிறது. காண்டம் - பகுதி. இவற்றால் செலுத்தப்படும் அசுத்தமாயா தத்துவங்கள் ஏழும் உயிருக்கு ஆணவச் சேர்க்கையால் உண்டான அறியாமை நீங்கச் செய்து உயிரின் ஆற்றல்களான ஞானம், இச்சை, கிரியைகளை விளங்கச் செய்கின்றன. இதனால் உயிர் வினையை ஈட்டி நுகரும் பலனைப் பெறமுடிகிறது.



இதற்குத் துணை புரிவதால் வித்தியா தத்துவங்கள் *போசயித்திரு காண்டம்* எனப்படுகின்றன. போசயித்திரு என்பதன் பொருள் நுகர்வோன்.

பிரகிருதி மாயா தத்துவங்களின் மூலம் உயிர் இன்பம், துன்பம், மயக்கம் ஆகியவற்றை அடைகிறது. இவை முக்குணத் தன்மை கொண்டவை. இந்தப் போகங்களில் உயிரை உட்படுத்துவதால் ஆன்ம தத்துவங்கள் *போக்கிய காண்டம்* (அல்லது போக காண்டம்) எனப்படுகின்றன.

**7. புருடன் என்ற பெயரால் தத்துவமும் ஆன்மாவும் குறிக்கப்படுவதன் காரணம் என்ன?**

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய ஐந்து தத்துவங்களும் சேர்ந்து ஆன்மாவுக்குச் சட்டைபோல அமைகின்றன. இது ஆன்மாவின் *கஞ்சுக சரீரம்* எனப்படும். இந்த ஐந்து தத்துவங்களின் கூட்டு புருடதத்துவம். இத் தத்துவங்களின் சேர்க்கையால் ஆன்மா செயற்பட ஆயத்தமாக நிற்கும். இந்நிலையில் ஆன்மா *புருடன்* (புருஷன்) எனப்படும்.

**8. புருடனாக அமைந்த ஐந்து தத்துவங்களின் செயற்பாட்டைத் தனித்தனியாக விளக்குக.**

உயிர்கள் முன் செய்த வினைப்பலனை இன்ன காலத்தில் அனுபவிக்க வேண்டுமென்பது காலம் என்ற தத்துவத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகிறது. ஒருவர் செய்த வினையின் பயனை அவரே அனுபவிப்பதும் அனுபவிக்கும் சூழலும் நியதி தத்துவத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகின்றன. ஆணவத்தினால் மறைக்கப் பட்டு வெளிப்பட முடியாமல் இருக்கும் உயிரின்

செயலாற்றல் (கிரியா சக்தி) வெளிப்பட கலை துணைபுரிகிறது. இது போல் உயிரின் அறிவாற்றல் (ஞான சக்தி) வெளிப்படத் துணைபுரிவது வித்தை. உயிரின் இச்சாசக்தி வெளிப்படத் துணை புரிவது அராகம்.

அகங்கார தத்துவம் செயலை ஊக்குவிப்பது. இதனால் உயிரின் கிரியா சக்தியை எழுப்பும் கலை என்ற தத்துவம் அகங்கார தத்துவத்துக்கு உட்கருவியாக உள்ளது. உயிரின் ஞான சக்தியை எழுப்பும் வித்தை என்ற தத்துவம் புத்தி தத்துவத்திற்கு உட்கருவியாக உள்ளது. ஞான சக்தி (அறிவாற்றல்) தொழிற்படும் இடம் புத்தி தத்துவம் எனப்படுகிறது.

**9. தன்மாத்திரை என்பதன் பொருள் என்ன?**

தன்மாத்திரை என்றால் அதனளவில் அடங்கி இருப்பது எனலாம். தன்மாத்திரைகள் என்று குறிப்பிடப் படும் சத்தம், பரிசம் (ஓசை, ஊறு) போன்றவை நாம் அனுபவிக்கும் சத்தம் முதலியவற்றுள் அடங்கியிருப்பன. தன்மாத்திரை = தத் + மாத்திரை. தத் - அது; மாத்திரை - அளவு. தன்னளவில் உள்ளது தன்மாத்திரை.

தூலப் பொருட்களுக்கு சூக்குமப் பொருட்கள் மூலமாக அமைகின்றன. ஐம்பூதங்களுக்குத் தன்மாத்திரைகள் மூலமாக உள்ளன. மண், நீர், தீ, காற்று, வெளி ஆகியவற்றுக்கு முறையே நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை ஆகிய தன்மாத்திரைகள் மூலமாக அமைந்துள்ளன.

**10. நமது உடம்பின் அமைப்பில் தொடர்புடைய தத்துவங்கள் எவை?**

உடம்பு என்று கூறும் பொழுது எமக்குள்ள பரு உடம்பை விட நுண்ணுடம்புகளும் உள்ளன. தத்துவங்களில் சிவ தத்தவங்கள் ஐந்தும் இவற்றில் தொடர்பு கொள்வதில்லை.



பூதங்கள் ஐந்தும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்தும் பரு உடம்பாக வருகின்றன. இதனைத் *தூல சரீரம்* என்றும் *அன்னமய கோசம்* என்றும் குறிப்பிடுவர். (கோசம் -உடம்பு). மனம், புத்தி, ஆங்காரம் மூன்றும் தன்மாத்திரைகள் ஐந்தும் சேர்ந்து *சூக்கும சரீரம்* அல்லது *பிராணமய கோசம்* எனப்படும். சித்தம் அல்லது பிரகிருதி குணசரீரம் அல்லது *மனோமய கோசம்.* (சித்தமாய் நிற்பது பிரகிருதி). காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஐந்தும் *கஞ்சுக சரீரம்* அல்லது *விஞ்ஞானமய கோசம்.* (இந்த ஐந்தின் கூட்டு புருட தத்துவம்). வித்தியா தத்துவங்களில் ஒன்றான மாயை *காரண சரீரம்* அல்லது *ஆனந்தமய கோசம்.* இவ்வாறு உடம்புகள் ஐந்தாக உள்ளன. இவற்றில் இறுதி மூன்று சரீரங்களையும் *பர சரீரம்* எனப் பெயரிட்டு, உடம்புகளை தூல சரீரம், சூக்கும சரீரம், பரசரீரம் எனச் சொல்லுதலும் உண்டு. பரசரீரம் என்பதற்கு *அதிசூக்கும சரீரம்* என்பது பொருள். தூல சரீரம் முதல் காரண சரீரம் வரை ஒன்றைவிட ஒன்று நுண்ணியதாக இருக்கும்.

**11. தாத்துவீகம், மாயேயம் என்பன யாவை?**

பிரகிருதி மாயா தத்துவங்கள் இருபத்திநான்கின் தொடர்புடையவையும் அவற்றின் கூறுகளும், முக் குணங்களும், நால்வகை வாக்கும் *தாத்துவிகம்* எனப்படும். இவை அறுபதாகக் கொள்ளப்படுகின்றன. இந்த அறுபது தாத்துவிகங்களையும் முப்பத்தாறு தத்துவங்களுடன் சேர்த்து, தத்துவங்கள் தொண்ணுற்றாறு என்று கூறும் வழக்கமும் உண்டு.

மாயா காரியங்களான தத்துவங்ளை *மாயேயம்* என்று கூறுவதும் உண்டு.

### மாயா தத்துவங்கள்




# 8. சிவனின் அருட்டிருமேனி

**1. உயிர் எடுக்கும் உடல்கள் அல்லது வடிவங்கள் மாயையிலிருந்து இறையருளால் பெறப்படுகின்றன. இறைவன் எடுக்கும் வடிவங்கள் அப்படி அல்ல என்று கூறப்படுகின்றது. இதன் காரணம் என்ன?**

இறைவனுக்கு உடம்பு (உருவம்) உண்டானால், அது மாயையிலிருந்து தான் வரவேண்டும் என்று கொள்ளின், அவன் மாயையில் அகப்பட்டவன் என்ற நிலை தோன்றும். அத்துடன் அவனின் உடம்பைப் படைத்து அளிப்பவன் இன்னொருவன் இருக்கிறான் என்ற நிலையும் உண்டாகும்.

கடவுள் குறித்த இரண்டாம் அத்தியாயத்தில் கூறியவாறு, இறைவன் தன் நிலையில் உருவமற்று அருவமாக இருக்கிறான். இங்ஙனம் இருந்தால், அவனால் உயிர்களுக்கு எந்தப் பயனும் இல்லை. அவனைக் காணவேண்டும், கண்டு தொழவேண்டும், தொழுது அவனின் அருளைப் பெறவேண்டும் என்ற உயிர்களின் ஆர்வம் நிறைவேறாமல் போகும். எனவே உயிர்களுக்கு உதவுவதற்காக இறைவன் உருவம் கொள்கிறான். அவன் கொள்ளும் உருவம் அருள் உருவம். அது மாயையிலிருந்து தோன்றியதல்ல. சிவஞான சித்தியார் என்ற சித்தாந்த நூலில் வரும் "அருள்உரு உயிருக்கென்றே ஆக்கினன்" என்ற தொடர் இதனை விளக்குவதாக உள்ளது.

**2. இறைவன் கூர்ம அவதாரம், கல்கி அவதாரம் போன்ற அவதாரங்கள் எடுத்ததாகக் கூறப்படுகிறது.**

**இந்த அவதாரங்களில் அவன் ஒவ்வொரு உடம்பு எடுக்கிறான். சைவ சித்தாந்தம் இது பற்றி கூறுவதென்ன?**

இந்த அவதாரங்கள் சைவசமயத்தில் இல்லாதவை. இவை வேற்று மதங்களில் காணக்கூடயவை. கடவுள் தாயின் வயிற்றில் பிறப்பது என்பது சைவத்தில் இல்லை. சிவனைப் "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்று கந்தரனுபூதி விளக்குகிறது. பிறப்பு இறப்பு இல்லாத, என்றுமுள்ள பரம்பொருள் அடியவர்களுக்கு உடம்போடு கூடி வந்து அருள்புரிவதை வரலாற்றில் காணலாம். மாணிக்கவாசக சுவாமிகளுக்கு குருவடிவாகி வந்து குருந்த மரத்தடியில் அருள்புரிந்த வரலாறுண்டு. இங்கே மாணிக்கவாசக சுவாமிகள் கண்ட வடிவம் சிவனின் அருள் திருமேனி. இது சிவன் எடுத்த அவதாரமல்ல.

**3. இறைவன் கொள்ளும் வடிவங்களில் மாயையின் தொடர்பு எதுவும் இல்லை என்று கூறமுடியுமா?**

உலகைச் செயற்படுத்தி நிற்கும் இறைவனுக்கு மாயா காரியமான சிவ தத்துவம் இடமாய் நிற்கிறது. இந்த வகையில் இறைவன் கொள்ளும் வடிவம் மாயையின் தொடர்புடையது எனக் கருதலாம். ஆனால் அவனின் வடிவம் மாயையாலானதன்று; அது அருள் வடிவம்.

**4. சிவ தத்துவத்தை இடமாகக் கொண்டு இறைவன் கொள்ளும் வடிவங்களை விளக்குக.**

தன்னிலையில் சிவனைப் *பரசிவம்* என்று அழைப்பதுண்டு. பரசிவம் உயிர்கள் மீது கருணை கொள்ளும் நிலையில் *பராசக்தி* எனப்படும். சுத்த மாயையில் உள்ள நாதம் முதலிய ஐந்து சிவ தத்துவங்களையும் தோற்றுவிப்பது பராசக்தியே. இத் தத்தவங்களில் நின்று சிவன் எடுக்கும் திருமேனிகள் உண்மையில் பராசக்தியை இடமாகக் கொண்டவை. இவை ஏழு திருமேனிகள். இந்த ஏழினோடு, தத்துவத் தொடர்பில்லாத பரசிவனையும் பராசக்தியையும் சேர்த்து சிவன் கொண்ட திருமேனி ஒன்பதாகக் கொள்ளப்படும்.



இத் திருமேனிகள் கொண்ட இறை பெயர்கள் முறையே *பரசிவம், பராசக்தி, அபரசிவன் (நாதம்), அபரசக்தி (விந்து), சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா* என்பனவாகும். தத்துவங்களைப் பொருந்தும் முறையில், நாதத்தில் அபரசிவனும், விந்துவில் அபரசக்தியும், சாதாக்கியத்தில் சதாசிவனும், ஈசுரத்தில் மகேசுவரனும், சுத்தவித்தையில் உருத்திரன், விஷ்ணு, பிரமாவும் பொருந்தி நிற்பர். பரசிவமும் பராசக்தியும் இத்தத்துவங்களைக் கடந்த நிலையில் உள்ளனர். உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் இந்த ஒன்பது நிலையில் நடிக்கிறான் என்று சித்தியார் கூறுகிறது. "நவந்தரு பேதமாக ஏக நாதனே நடிப்பன்" என்பது சித்தியார்த் தொடர். சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமா ஆகியோரின் சக்திகள் முறையே மனோன்மணி, மகேஸ்வரி, உமை, இலஷ்மி, சரஸ்வதி ஆவர்.

**5. சிவனுக்கும் சக்திக்குமுள்ள உறவு என்ன?**

சூரியனிடத்தில் இயல்பாகவே ஒளி இருப்பது போல், சிவனிடத்தில் இயல்பாகவே சக்தி உள்ளது. சிவனின் தன்னிலையில் சக்தி அவனிடத்தில் ஒடுங்கி இருக்கும். உயிர்களுக்கு அருள் புரியும் நிலையில் அவனிடத்திலுள்ள சக்தி விரிந்து சிவனுக்குரிய வடிவங்களைப் பெறும்.

இவ்வடிவங்கள் சிவனின் கிருத்தியங்களுக்கு (செயற் பாட்டுக்கு) ஏற்ப அமையும். இவ்விரு நிலைகளிலும் சிவமும் சக்தியும் ஒன்றேதான். ஒன்றிலிருந்து ஒன்று பிரிவில்லாத சிவன் சக்தி உறவு *தாதான்மிய உறவு* (*தாதான்மிய சம்பந்தம்*) எனப்படும்.

**6. சிவமூர்த்தங்கள் என்பன எவை?**

சுத்த மாயையிலுள்ள மகேசுவர தத்துவத்தில் நின்று சிவன் கொள்ளும் இருபத்தைந்து மூர்த்தங்கள் சிவமூர்த்தங்கள் அல்லது மகேசுவர வடிவங்கள் எனப்படும். இவை, சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாண சுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தாரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்ரப்பிரதர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என்பவையாம்.

இச்சிவ மூர்த்தங்களும் சிவலிங்கம், அம்பிகை, விநாயகர், முருகன், வைரவர் ஆகிய சிவவடிவங்களும் வழிபாட்டுக்கு உரியவை.

**7. பிற தெய்வ வடிவங்கள் வடிபாட்டுக்குரியன இல்லையா?**

சிறு தெய்வங்களும் பிற தெய்வங்களும் சைவர்களின் வழிபாட்டுக்கு உரியவை அல்ல. இவற்றை வழிபடுவதால் எந்தப் பயனும் விளையாமல் ஆன்மீக வளர்ச்சிக்குத் தடை உண்டாதலும் உண்டு. சிறு தெய்வங்கள் பொதுவாக உயர்நிலை அடைந்த ஆன்ம வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களும் சிவனருளாலே உயர்நிலை அடைந்தவர்கள்; தமது புண்ணிய பலத்தினால் வானுலகத்தில் இருப்பவர்கள்.



இவர்களை வழிபடுவதை விடுத்து மேற் குறிப்பிட்ட சிவ மூர்த்தங்களை வழிபடுவது நிலையான பலனைத் தரும். இதனாலேயே திருமுறைகளும் சாத்திர நூல்களும் சிவ வழிபாட்டை ஊக்குவித்து, பிற தெய்வ வழிபாட்டைக் கண்டிக்கின்றன.

**8. இறைவன் கொள்ளும் திருமேனிகள் அவன் செய்யும் ஐந்தொழிலுடன் எவ்வாறு தொடர்பு கொள்கின்றன?**

சுத்தவித்தையில் இறைவன் அயனாக (பிரமனாக) நின்று படைத்தல் தொழிலைச் செய்கிறான். மாலாக (விட்டுணுவாக) நின்று காத்தல் தொழிலைச் செய்கிறான். உருத்திரனாக நின்று அழித்தல் தொழிலைச் செய்கிறான். மகேசுர தத்துவத்தில் மகேசுவரனாக நின்று மறைத்தல் தொழிலைச் செய்கிறான். சாதாக்கிய தத்துவத்தில் சதாசிவனாக நின்று அருளல் தொழிலைச் செய்கிறான். இவற்றை நோக்கின் சிவபெருமான் ஒருவரே ஐந் தொழில்களும் செய்பவர் என்பது பெறப்படும்.

மேலே குறிப்பிட்ட உருத்திரனை 'மகாருத்திரன்' என்றும் குறிப்பிடுவர். இவர் சுத்த மாயையில் நின்று அழித்தல் தொழில் செய்பவர். சுத்தமாயைக்குக் கீழும் உருத்திரர்கள் உள்ளனர். இவர்கள் 'குணிருத்திரர்' எனப்படுவர். இவர்கள் உயிர்வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்; இறைநிலை அடைந்தவர்கள். சிவபெருமான் அதிட்டிக்க (அருள் ஆணையிட) செயலாற்றுபவர்கள் இவர்கள். இவர்களின் திருமேனி *அணுபட்சத் திருமேனி* எனப்படும். மகாருத்திரரின் திருமேனி *சம்புபட்சத் திருமேனி* எனப்படும். (அணு - ஆன்மா; சம்பு - சிவன்). சுத்தமாயைக்குக்

கீழ் உருத்திரர் போன்று பிரமாக்களும் விஷ்ணுக்களும் உள்ளனர். இவர்களும் அணுபட்சத் திருமேனி கொண்டவர்கள். சிவபெருமானின் அடிமுடி தேடிச் சென்றவர்கள் இவர்களே.

**9. சிவனின் அடிமுடி தேடிய வரலாறு எதனை உணர்த்துகிறது?**

அடிமுடி தேடிய மாலும் அயனும், மேலே கூறியபடி, ஆன்மவர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தம்புண்ணிய பலத்தால் வானுலகில் இருந்தாலும், தாம் உயர்நிலையில் இருப்பவர் என்ற கர்வம் இவர்களுக்கும் உண்டு. இந்தக் கர்வம் ஆணவத் தொடர்பாலான மலவாசனையால் வந்தது. இது இருக்கும் வரை இறைவனை முற்றாக அறிய முடியாது என்பதை உணர்த்துவது இந்தக் கதை.

**10. திருக்கோயில்களில் காணும் மூர்த்தங்கள் பல இறைவன் இறைவி (ஆண், பெண்) வடிவங்களாக உள்ளன. இவற்றுக்கிடையில் கணவன் மனைவி உறவு, தந்தை மகன் உறவு போன்றவையும் கூறப்படுகின்றன. இவை குறித்த விளக்கம் என்ன?**

இறைவனின் அருட்சக்தியே இறைவியாகக் கொள்ளப் படுகிறது. இறை சக்தியும் ஞான சக்தி, கிரியா சக்தி, இச்சா சக்தி என மூன்றாகக் கூறப்படுகிறது. இறைவன் அல்லது இறைவி தனியாக நிற்கும் வடிவங்கள் இம்மூன்றும் சேர்ந்த இறைவனை அல்லது சக்தியை உணர்த்துகின்றன. உதாரணம்: விநாயகர் வடிவம், சிவன் மட்டும் தனியாக இருக்கும் வடிவம். சில வடிவங்கள் இறைவனும் இறைவியும் சேர்ந்திருப்பவை. இவை இறைவனையும் இறை சக்தியையும் உணர்த்துபவை.



உமாமகேசுவர வடிவம் இத்தகையது. வள்ளி, தெய்வானை உடனிருக்கும் முருகனின் வடிவத்தில் தெய்வானை இறைவனின் கிரியா சக்தியையும், வள்ளி இச்சா சக்தியையும், வேல் ஞான சக்தியையும் குறிப்பன.

இறைவனைக் கணவனாகவும் இறைவியை மனைவியாகவும் கொள்வது உலகியல் நோக்கில் அமைந்தது. சிவனைத் தந்தையாகவும் முருகனை மகனாகவும் கொள்வதும் இத்தகையதே. இத்தகைய உறவுகளை விளங்குவதற்கு சைவ சித்தாந்த அறிவு பெரிதும் துணை செய்யும். அபிராமி அந்தாதியில் இறைவியைக் "கறைகண்டவனுக்கு மூத்தவளே" என்று அபிராமிப்பட்டர் விழிக்கிறார். பராசக்தி சுத்தமாயையில் நின்று கொண்ட அருட்டிருமேனி நீலகண்டன் (கறைக்கண்டன்) என்னும் வடிவம். இதனால் பராசக்தியாகிய இறைவி கறைகண்டனுக்கு மூத்தவளாக பாடப்பட்டார்.

**11. அருவ நிலையில் உள்ள இறைவனால் செயற்பட முடியுமா?**

அருவ நிலையில் இருக்கும் உயிர் எமது புலன்களுக்குத் தெரிவதில்லை. ஆயினும் அது உடம்பை இயக்குகிறது. மின்சக்தி எமது கண்ணுக்குத் தெரியவதில்லை. ஆயினும் அது ஒளியைத் தருகின்றது. இது போல புலன்களுக்குப் புலப்படாத அருவ நிலையில் உள்ள இறைவனும் தனது அருட்சக்தியை கொண்டு செயற்படுகிறார்.

**12. அருவுருவமான சிவலிங்க வடிவ அமைப்பு எதனைக் குறிக்கிறது?**

சுத்த மாயையில் இறைவனின் ஞான சக்தி பதிவதால் நாத தத்துவமும் கிரியா சக்தி பதிவதால் விந்து தத்துவமும் தோன்றுகின்றன. ஞானமும் கிரியையும் சமமாகப் பதிவதால் மூன்றாவது தத்துவமான சாதாக்கிய தத்துவம் தோன்றுகிறது. இத்தத்துவத்தில் நிற்கும் சிவன் சதாசிவம் எனப்படுவான். சதாசிவத்தைக் குறிப்பது சிவலிங்க வடிவம். இவ்வடிவத்தின் மேல் பாகமான நீள்வடிவம் நாதத்தையும் கீழ்ப்பாகமான வட்ட வடிவம் விந்துவையும் குறிப்பனவாக உள்ளன. (இறைவனது சக்தி சுத்தமாயையில் பதிவதால் ஒரு அசைவு தோன்றி நாதமும், ஒரு சுழற்சி தோன்றி விந்தும் தோன்றுகின்றன என்று முந்தின பாடத்தில் விளக்கப்பட்டது. சிவலிங்கத்தின் மேலுள்ள நீள் கோட்டு வடிவம் இந்த அசைவையும் கீழ் வட்ட வடிவம் சுழற்சியையும் குறிக்கின்றன).

**13. நடராசப் பெருமானின் திருவடிவம் எதனைக் குறிக்கிறது?**

ஆடும் பெருமானின் திருவடிவம் சிவனின் ஐந்தொழிலைக் குறிப்பது. அதனோடு, சிவனின் அசைவற்ற தன்மையையும் அசையும் தன்மையையும் (static and dynamic states) ஒரு சேரக் காட்டுவதாக இது உள்ளது. இது அவனின் சொரூப நிலையையும் தடத்த நிலையையும், சிவ சக்தி தத்துவத்தையும் குறிப்பதாகவும் உள்ளது.

ஆடும் கூத்தனின் உடுக்கை ஏந்திய திருக்கரம் படைத்தலையும், அபய கரமாக நிற்கும் திருக்கரம் காத்தலையும், அனலை ஏந்திய திருக்கரம் அழித்தலையும், முயலகன் மேல் ஊன்றிய திருவடி மறைத்தலையும், தூக்கிய திருவடி அருளளையும் குறிப்பன. உண்மை விளக்கம் என்ற சித்தாந்த நூல் இதனைத் தெளிவாக



விளக்குகிறது. (இது தொடர்பான, 'தோற்றம் துடியதனில்' என்று தொடங்கும், உண்மைவிளக்கப் பாடலை எடுத்தாண்டு ஈழத்துக் கலாயோகி ஆனந்தா குமாரசுவாமி அவர்கள் தனது உலகப் புகழ் பெற்ற Dance of Siva என்ற நூலை எழுதினார் என்பது குறிப்பிடத்தக்கது.)

**14. தட்சணாமூர்த்தியின் கைவிரல்களில் சுட்டு விரல் பெருவிரலை நோக்கி வளைந்திருப்பதன் தத்துவம் என்ன?**

விரல்களின் இந்த நிலை சின்முத்திரை எனப்படும். இதில் சுட்டு விரல் பெருவிரலை நோக்கி வளைந்திருக்க, மற்றைய மூன்று விரல்களும் விலகித் தனித்திருக்கும். பெருவிரல் இறைவனையும் சுட்டு விரல் ஆன்மாவையும் குறிப்பன. நடுவிரல் ஆணவத்தையும் மோதிர விரல் கன்மத்தையும் சிறுவிரல் மாயையும் குறிப்பன. ஆன்மா இறைவனைச் சாரும் பொழுது அது முன்னர் மும்மலங்களைச் சார்ந்திருந்த நிலை விலகும். இதன் ஞான விளக்கமாக அமைந்து இதனைக் குறிப்பது சின்முத்திரை. சின்முத்திரை = சித் + முத்திரை. சித் - ஞானம், முத்திரை - அடையாளம். ஆன்மா மும்மலங்களை விட்டுவிலகி இறையருளைச் சார்ந்து நிற்கும் சாதனையைக் கொள்ள வேண்டுமென்று உணர்த்துவது சின்முத்திரை.

# 9. இறை உயிர் உறவு

**1. இறைக்கும் உயிருக்கும் உள்ள உறவு எத்தகையது?**

இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள உறவைச் சைவசித்தாந்தம் *அத்துவித (அத்வைத)உறவு* என்று கூறும். வேறு சில இந்திய தத்துவங்களும் இந்த உறவு பற்றிக் கூறுகின்றன. ஆனால் அத்துவிதம் என்ற சொல்லுக்கு அவை தரும் விளக்கம் சைவ சித்தாந்தம் தரும் விளக்கத்தின் வேறானது.

துவிதம் (துவைதம்) என்றால் இரண்டு என்று பொருள். அத்துவிதம் என்றால் இரண்டற்றது என்பது பொருள். இரண்டற்றது என்பதற்கு ஒன்று என்று பொருள்கண்டு, உயிரும் இறைவனும் ஒன்றென்றும், இறைவனின் ஒரு கூறு உயிர் என்றும் பொருள் காண்பது வேதாந்தத்தில் காணக்கூடியது. அத்துவிதம் என்பது இரண்டற்றது, ஆனால் ஒன்றல்ல என்று சைவ சித்தாந்தம் பொருள் காணும். இரண்டல்ல என்பது இரண்டுக்கு மேற்பட்டதையும் குறிக்கும்.

பதியாகிய சிவனுக்கும் பசுவாகிய உயிருக்கும் உள்ள உறவு மூன்று வகையாக உள்ளது என்பது சித்தாந்தக் கொள்கை. இறைவன் உயிருடன் **ஒன்றாய் உடனாய் வேறாய்** உள்ளான். ஒன்றாய், உடனாய், வேறாய் நிற்கும் மூன்றுவித உறவை சைவசித்தாந்தம் அத்துவித உறவு என்கிறது.

**2. இந்த மூவகை உறவையும் விளக்குக.**

எமது உடம்பில் ஒன்றாக உயிர் இருக்கிறது. இதே போல் இறைவனும் உயிருடன் ஒன்றாக இருக்கிறான்.



உயிர் உடம்பில் ஒன்றாக இருந்தாலும் அது உடம்பிலிருந்து வேறானது. இதேபோல் இறைவனும் உயிரிலிருந்து வேறானவன். உடம்புடன் உடனிருந்து உயிர் அதனை இயக்குகிறது. இதேபோல இறைவனும் உயிரோடு உடனிருந்து அதனை இயக்குகிறான்.

இங்ஙனம் ஒன்றாய், வேறாய். உடனாய் இறைவன் உயிருடன் உறவு கொண்டு அதனை வளர்க்கிறான்.

**3. அத்வைதம் பற்றியும் துவைதம் பற்றியும் பேசும் முக்கிய தத்துவங்களைக் குறிப்பிடுக?**

இறைவன், ஆன்மா, உலகு என்னும் பொருள்கள் குறித்த கருத்து வேறுபாடுகள் அத்வைதம், துவைதம் பற்றிய கொள்கைகளுக்கு தளம் அமைத்துள்ளன. இறைவனும் ஆன்மாவும் ஒன்றுதான்; இரண்டல்ல என்பது சங்கரரின் அத்வைதம். இதனைக் *கேவாலாத்வைதம்* என்பர். இறைவனும் உண்டு, ஆன்மாவும் உண்டு, ஆனால் ஆன்மாவுக்கு உள்ள உடம்பு போல் இறைவனுக்கு உடம்பாக இருப்பது ஆன்மா. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள உறவு சரீரி-சரீரம் போன்றது, என்பது இராமானுஜரின் அத்வைதம். இது *விசிஷ்டாத்வைதம்* எனப்படும். இறைவனும் ஆன்மாவும் வேறுபட்ட இரு பொருள்கள் என்பது மத்வரின் *துவைதம்*. சங்கரர், இராமனுஜர், மத்வர் ஆகிய மூவரின் தத்துவங்களும் வேதாந்த தத்துவத்தின் பிரிவுகளே. ஆனால் இன்று சங்கரரின் வேதாந்தக் கொள்கையே வேதாந்தம் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. அத்வைத வேதாந்தம், விசிஷ்டாத்வைத வேதாந்தம், துவைத வேதாந்தம் ஆகியவை இவர்களின் தத்துவங்கள். அத்வைதம் குறித்த சைவ சித்தாந்த விளக்கம் முன்னர் கூறப்பட்டது. இது *சுத்தாத்வைதம்* எனப்படும்.

**4. இறைவனுக்கும் உயிருக்கும் பொதுவான இயல்புகள் உண்டா?**

உயிருக்கு அறிதல், செயலாற்றுதல், இச்சை கொள்ளல் ஆகிய ஆற்றல்கள் உள்ளன. இவ்வாற்றல்கள் முறையே ஞான சக்தி, கிரியா சக்தி, இச்சா சக்தி எனப்படும். இறைவனுக்கும் இந்த ஆற்றல்கள், அவனின் சக்தியாக, உள்ளன. இவை இறைவனுக்கும் உயிருக்கும் பொதுவானவை. இறைவனின் ஆற்றல்கள் எதனாலும் குன்றுதலின்றி முற்றாக வெளிப்படுகின்றன. ஆனால் உயிரின் ஆற்றல்கள் மலத் தொடர்பால் முற்றாக வெளிப் படுவதில்லை.

**5. இறையருளைப் பெறுவதற்கு ஞானிகள் இறைவனுடன் தந்தை மகன் உறவு போன்ற பலவகை உறவுகளை வளர்ப்பதாகக் கூறப்படுகிறது. இத்தகைய உறவுகள் எத்தகையன?**

மகன் தன் தந்தையைக் கனம் பண்ணிப் பணிவது போன்று சாதகனும் இறைவனைத் தந்தையாகக் கொண்டு ஆன்மீக சாதனையில் ஈடுபடலாம். இந்த வழி *சற்புத்திர மார்க்கம்* எனப்படும். இன்னொரு வழி இறைவனை எசமானாகவும் தன்னைச் சேவகனாகவும் கொண்டு சாதனையில் ஈடுபடுவது. இது *தாசமார்க்கம்* எனப்படும். மூன்றாவது வழி தோழர் இருவரின் உறவு நிலையில் நின்று சாதனை செய்வது. இது *தோழமை மார்க்கம்* அல்லது *சகமார்க்கம்* எனப்படும். நான்காவது வழி குரு சீடன் உறவு போன்றது. இது *ஞானமார்க்கம்* எனப்படும். இந்த நாலு வழிக்கும் உதாரணமாக முறையே சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகரின் வழிகளைக் கூறுவதுண்டு.



மேற்கூறப்பட்ட வழிகள் எல்லாம் பாவனையால் இறைவனுடன் கொண்ட உறவுகள் என்பது குறிப்பிடத் தக்கது. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள உறவு ஆண்டான் - அடிமை உறவே. எந்த நிலையிலும் அவன் ஆண்டான், நாம் அடிமை. சுந்தரமூர்த்தி நாயனார் “மீளா அடிமை உமக்கே ஆளாய்” என்று கூறுவதிலிருந்து இதனை உணரலாம். அவரை இறைவன் ஆட்கொண்ட வரலாறும் இதனை உணர்த்துவதாக உள்ளது.

**6. கணவன்-மனைவி, அல்லது நாயகன்-நாயகி உறவு சைவத்தில் இல்லையா? சில திருமுறைப் பாடல்களில் இதனைக் காணக் கூடியதாக இருக்கிறதே.**

இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள உறவு நாயகன் - நாயகி உறவு போன்றது என்பது சைவத்தில் இல்லாத ஒன்று. இது வைணவத்தில் காணக் கூடியது. அப்பரடிகளின் “முன்னம் அவனுடைய” என்று தொடங்கும் தேவாரத்தில், ஒரு கன்னிப்பெண் சிவன் மேல் காதல் கொண்டு அவனுடைய பெயர், ஊர் முதலியனவற்றைக் கேட்பதான செய்தி வருகிறது. இறுதியில், இத்தேவாரம் “தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள், தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே” என்று முடிகிறது. இங்கே ஆன்மா கன்னியாக உருவகிக்கப்படுகிறது. தலைவனான இறைவனை அடைய வேண்டுமென்ற உயிரின் துடிப்பு உணர்த்தப் படுகிறது. ஆனால் இறைவனின் திருவடியை அது முடிவில் அடைவதாகக் கூறப்படுகிறது. அவனின் திருத்தாள் அவனின் அருளைக் குறிப்பது. ஆன்மா இறுதியில் சிவனருளில் திளைக்கிறது. இங்கே நாயகன் - நாயகி உறவுக்கு இடமில்லை.

சில திருமுறைப் பாடல்கள் தமிழிலுள்ள அகத்திணைப் பாடல் மரபில் உள்ளன. அவற்றில் தலைவன் - தலைவி உறவு பாவனையாக வருகிறது. இவற்றைச் சைவ சித்தாந்தப் பின்னணியில் கண்டு பொருள் காணவேண்டும்.

**7. நாம் புற உலகத்தோடு நெருக்கமான உறவைக் கொண்டுள்ளோம். இதனைத் துண்டித்து இறைவனுடன் நெருக்கமான உறவைக் கொள்ள முடியுமா?**

புற உலகத்துடன் மாத்திரமின்றி பொறி புலன் களுடனான அக உலகத்துடனும் நெருக்கமான உறவு கொண்டுள்ளோம். புலன்களின் வழியில் சென்று உலகப் பற்றை வளர்க்கிறோம். இது உரியின் இயல்புக்கு ஏற்றதல்ல. இறையருளில் வாழ்வதே உயிரின் உண்மை இயல்பு என்பதை உணரும் போது புலன்களை ஈர்க்கும் உலகப் பொருட்களின் மேலுள்ள பற்று நீங்கிவிடும்.

**8. உலகப்பற்று நீங்கி இறைபற்று வளர்வதற்கு இந்த நிலை வருவதற்கு வழி என்ன?**

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய ஆன்மீக வழி நான்கிலும் சாதனை செய்து வளர்ச்சியடையும் போது இறையருளைப் பெறும் பக்குவநிலை கிட்டும். அப்பொழுது எமது பொறி புலன்களின் வழி செல்வது நின்று, உலகப் பற்று நீங்கி இறை அருளின் வழியிற் செல்வோம்.

**9. சரியை, கிரியை ஆகியன பற்றி விளக்குக.**

சிவாலயத்துக்கும் சிவனடியார்களுக்கும் தொண்டு செய்தல் சரியை. சிவலிங்கப் பெருமானை அகத்தும் புறத்தும் பூசித்தல் கிரியை. விடயங்களின் வழியே போகாவண்ணம் மனத்தை நிறுத்தி சிவத்தைத் தியானித்து, பின்பு தியானிப் போனாகிய தானுந் தியானமுந் தோன்றாது தியானப் பொருளாகிய சிவம் ஒன்றே விளங்கப் பெறுதல் யோகம். பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் இலக்கணங்களை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடல் ஞானம். *(இவ்விளக்கம் தவத்திரு ஆறுமுகநாவலரின் 'சைவ வினா விடை' இரண்டாம் புத்தகத்தில் காணப்படுவது. சுருக்கமாகவும் தெளிவாகவும் உள்ளது என்பதால் அப்புத்தகத்தில் உள்ளவாறே தரப்பட்டுள்ளது.)*

**10. இத்தகைய அனுபவத்தில் குருவின் இடமென்ன? கடவுள் குருவாக வருவதுண்டா?**

முற்பிறவிகளில் செய்த ஆன்மீக சாதனைகளின் பலனாகப் பக்குபமடைந்த பொழுது, குரு வந்து எமது உண்மை இயல்பு இறையருளில் வாழ்தல் என்பதை உணர்த்துவார். பிறவிகள் தோறும் எம்மைப் பேணி வழி நடத்தும் இறைவனே இதனை உள் நின்றும் உணர்த்துவான்; குரு மூலமாகவும் உணர்த்துவான். மாணிக்கவாசகர் வாழ்வில் வந்தது போல் நேராகக் குருவடிவிலும் வருவான். இறைவன் எடுக்கும் வடிவம் எமக்குள்ளவைபோல மாயையினால் ஆனதல்ல; அது அருள் வடிவம், என்பது சிந்தனைக்குரியது.

**11. குரு லிங்க சங்கம வழிபாடு என்பது என்ன?**

சிவனே குருவாக வந்து அல்லது குருமூலமாக ஆன்மாவுக்கு உபதேசம் கொடுத்து முத்தியளிப்பன் என்பது சைவக்கொள்கை. இதனால், குருவைச் சிவமாகக் கொண்டு வழிபடுதல் வேண்டும். இது இறை உயிர்

உறவை வளர்த்து ஆன்மீக வளர்ச்சியடையத் துணை செய்யும்.

சிவன் சதாசிவ மூர்த்தியாக நின்று அருளல் தொழில் செய்து உயிர்கள் வீடு பேற்றை அடையத் துணைச் செய்கிறான். சிவலிங்கம் சதாசிவ மூர்த்தி. ஆகவே சிவலிங்கத்தை நாம் வழிபடுதல் வேண்டும்.

சங்கமம் என்பது கலந்து நிற்றல் என்று பொருள் தருவது. சிவனருளில் கலந்து நிற்பவர்கள் சிவனடியார்கள், சைவ நாயன்மார்கள். இத்தகையவர்கள் சிவனுக்கு ஆட்பட்டவர்கள். சங்கமம் என்பது இவர்களைக் குறிக்கும். இவர்களின் செயல் சிவன் செயலாக இருக்கும். அவர்கள் சிந்தனையில் சிவனே நிறைந்திருப்பதால் இவர்களையும் வழிபடுதல் வேண்டும்.

எனவே, குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, சங்கம வழிபாடு ஆகிய மூன்றும் எமக்கும் இறைவனுக்கும் உள்ள உறவை வளர்த்து வீடு பேற்றுக்கு வழி வகுக்கும்.

# 10. பந்தமும் வீடும்

**1. பந்தம், வீடு என்பவற்றின் பொருள் என்ன?**

பந்தம் என்றால் கட்டு என்று பொருள். பாசம் என்பதும் இதே பொருளை உடையது. ஆன்மாக்கள் மலங்களால் கட்டுப்பட்ட நிலை பந்தநிலை.

வீடு என்பது விடுதலை அல்லது விடுதலை பெற்ற நிலை. முத்தி என்பதும் இதே பொருளை உடையது. பாசத்திலிருந்து விடுதலை பெற்ற நிலை முத்தி எனப்படும்.

**2. உயிர்கள் மலத்தினால் கட்டுண்டது எப்பொழுது? இக்கட்டு எதனால் நேர்ந்தது?**

உயிர்கள் அனாதியாகவே ஆணவத்தினால் கட்டுண்டு உள்ளன. ஆதி என்றால் தொடக்கம் என்பது பொருள். அனாதி தொடக்கமற்றது. செம்பிற் கழிம்பு போல், நெல்லில் உமி போல் உயிருடன் இயல்பாகவே சேர்ந்திருப்பது ஆணவம். இதனால் ஆணவம் *சகச மலம்* எனப்படும். சகசமலம் என்றால் இயல்பாகச் சேர்ந்துள்ள மலம் என்பது பொருள்.

**3. கன்மமும் மாயையும் உயிரைக் கட்டுப்படுத்துவது இல்லையா?**

ஆணவ மல நீக்கத்திற்காக உயிருக்கு இறைவனால் ஊட்டப்பட்டவை கன்மமும் மாயையும். இவை ஆணவத்துடன் சேர்ந்து தொழிற்படுவதால், ஆணவக் கட்டு நீங்கும் வரை, அவையும் உயிருக்குக் கட்டாக உள்ளன. இதனால் இவற்றையும் மலங்கள் என்பர்.

ஆணவம்தான் உயிரின் மூலமலமாக உள்ளது. உயிர் பிறவிகள் எடுக்க முன் ஆணவமலத்தோடுதான் இருந்தது. உயிரின் இந்த நிலை *கேவலம்* எனப்படும்.

**4. கேவலத்தில் உயிர் எவ்வாறு இருந்தது?**

பிறவிகள் எடுக்க முன் இருந்த கேவல நிலையில் ஆணவம் இருள்போல் உயிரை மறைத்திருந்தது. உயிரின் அறிவு, செயல், இச்சை ஆகிய ஆற்றல்கள் வெளிப்பட முடியாமல் இருந்த நிலை இது. 'காரிருளில் கண்ணிலாக் குழவிபோல்' உயிர் இந்நிலையில் இருந்ததாகக் கூறித் தாயுமானவர் விளக்குவார்.

**5. இந்தக் கேவல நிலையிலிருந்து உயிர்விடுபட்டது எவ்வாறு?**

தனது ஆற்றல்களை வெளிப்படுத்த முடியாமல், தன்னையும் அறியாமல், தனக்கு மேலுள்ள பரம்பொருளையும் உணராமல் உயிர் இந்நிலையில் இருந்தது. அதன் பரிதாபமான இந்நிலையை மாற்றி உயிரை உய்விக்கக் கருணையே வடிவான இறைவன் உளம் கொண்டு, ஒரு நுண்ணுடம்பைப் படைத்து உயிருக்கு அளிக்கிறான். உயிர் பெறும் முதற்பிறவி (முதலுற்பவம்) இதுவாகிறது. உயிர் பெற்ற இந்த நுண்ணுடம்பு (சூக்கும சரீரம்) *புரியட்டகாயம்* எனப்படும். மனம், புத்தி, அகங்காரம் எனும் மூன்றும் தன்மாத்திரைகள் ஐந்துமாகிய எட்டுத் தத்துவங்களால் ஆனது புரியட்டகாயம். இறைவன் இதனை மாயையிலிருந்து படைத்தளிக்கிறான். எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையாய்க் கொடுக்கப்பட்டது இந்த நுண்ணுடம்பு.

இதனைப் பெற்றதும் உயிர் இயங்கத் தொடங்குகிறது. அதன் அறிவு, இச்சை, செயல் ஆகிய ஆற்றல்கள்



வெளிப்படுகின்றன. இச்சையின் வெளிப்பாட்டுக்கமைய விருப்பு வெறுப்புத் தோன்றி, இவை உயிரின் முதல் வினைக்குக் காரணமாகின்றன. இந்த வினைக்கேற்ப உயிருக்குப் பரு உடம்பு (தூல சரீரம்) இறைவனால் மாயையிலிருந்து படைத்து அளிக்கப்படுகிறது. உயிரின் கேவல நிலை மாறுகிறது.

**6. உயிர் எடுக்கும் இந்த முதற்பிறவி குறித்து பிற இந்தியத் தத்துவங்கள் கூறுவதென்ன?**

பொதுவாக உயிரின் மறு பிறவி (புனருற்பவம்) குறித்தே எல்லா இந்திய தத்துவங்களும் கூறுகின்றன. சைவ சித்தாந்தம் ஒன்றுதான் முதற்பிறவி பற்றிக் கூறுகிறது.

**7. கேவல நிலை மாறியபின் உயிரின் நிலை எத்தகையது?**

பரு உடம்புடன் புதிய பிறவி எடுத்த உயிர் செயல் புரிகிறது. அதன் செயல்களின் மூலம் முன் செய்த வினைப்பயன்கள் அனுபவத்திற்கு வந்து தீர்ந்து போகின்றன. ஆயினும் அதன் வினையினால் (செயல்களினால்) புதிய வினைப்பலன்கள் உண்டாக, அவற்றை அனுபவிக்க வேண்டியுள்ளது. இவற்றை அனுபவிப்பதற்கு ஏற்ற உடம்புடன் இன்னொரு பிறவியை இறைவன் கொடுக்கிறான். இங்ஙனம் வினையும் பிறவியும் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்கின்றன. உயிரின் இந்த நிலை *சகலம்* எனப்படுகிறது. பிறவிகள் தோறும் உயிர் எடுக்கும் உடம்பு சகல தத்துவங்களுடன் தொடர்புடையது. ஆதலின் சகலம் எனப்படுகிறது. இந்த நிலை மாறியபின் உயிர் பெறும் நிலை **சுத்தம்** எனப்படுகிறது.

**8. உயிரின் அவத்தை என்று கூறப்படுவது எது?**

அவத்தை (அவஸ்தை) என்பது நிலை என்று பொருள்படும். உயிர் உணர்வு பெறும் நிலைகள் அவத்தைகள் என்று சைவ தத்துவத்தில் கூறப்படுகின்றன.

சகலத்தில் உயிரின் உணர்வு தொடர்பான அனுபவ நிலைகளை ஐந்தாகப் பிரித்து ஐந்தவத்தை என்பர். இது நாளாந்தம் உயிர் மாறி மாறிப் பெறும் உணர்வு நிலைகளாகும். இவற்றில் முப்பத்தாறு தத்துவங்களும் அவற்றின் காரியமான தாத்துவிகங்களும் தொடர்புபடும். பொதுவாக நாம் நாளாந்தம் பெறும் அனுபவங்கள் தெளிவாக அறியக் கூடியவை. உணர்வு நிலையில் இவற்றை அறிவதில் தெளிவற்ற தன்மை இருக்கும்.

உயிர் ஐந்தவத்தை உறும்போது, ஒவ்வொன்றிலும் சில கருவிகளுடன் கூடியும் பிரிந்தும், ஒவ்வொரு இடத்தில் நிற்கும் என்பர். இவை வருமாறு :

1. ***சாக்கிரம்*** (கனவு நிலை) : இந்த அவத்தையில் உயிர் நெற்றி நடுவில் (இலாடத்தானத்தில்) 35 தத்துவங்களுடன் கூடி நிற்கும். இத் தத்துவங்கள் ஞானேந்திரியம் (5), கன்மேந்திரியம் (5), சத்தாதி விடயம் (5), வசனாதி விடயங்கள் (5), வாயுக்கள் (10). அந்தக் கரணம் (4), புருட தத்துவம் (1) ஆகும்.

2. ***சொப்பனம்*** (கனவு நிலை) : இதில் உயிர் கண்டத்தில் நிற்கும். அப்பொழுது செயற்படும் கருவிகள் 25. அவையாவன, சத்தாதி விடயம் (5), வசனாதி விடயம் (5), வாயுக்கள் (10), அந்தக்கரணம் (4), புருடன் (1).

3. ***சுழுத்தி*** (உறக்கநிலை) : இதில் உயிர் இதயத்தில், பிராணன், சித்தம், புருடன் என்னும் மூன்று கருவிகளுடன் நிற்கும்.



4. ***துரியம்*** (பேருறக்க நிலை) : இதில் உயிர் நாபியில் புருடன், பிராணன் என்னும் இரண்டு கருவிகளுடன் நிற்கும்.

5. ***துரியாதீதம்*** (உயிர்ப்படக்க நிலை) : இதில் உயிர் மூலாதாரத்தில் புருடன் என்னும் ஒரு கருவியுடன் நிற்கும்.

மேற்குறிப்பிட்ட சத்தாதி விடயம் என்பது, ஞானேந்திரியங்களின் ஆற்றல்களைக் குறிப்பன. இவை சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன; தன் மாத்திரைகளல்ல. தன் மாத்திரைகள் பஞ்சபூதம் தோன்றுவதற்குக் காரணமாய் உள்ளவை; சூக்கும பூதங்கள் எனக் கூறப்படுபவை. வசனாதி விடயங்கள் கன்மேந்திரியங்களின் ஆற்றல்களைக் குறிப்பன.

சாக்கிரதத்தில் தொடங்கி, கீழ் நோக்கி, துரியாதீதம் வரை உயிர் இறங்கும். இந்நிகழ்வில் ஒவ்வொரு இடத்திலும் உயிர் அந்த அந்த இடத்தில் கருவிகளின் ஒவ்வொரு பகுதியை நிறுத்தி இறங்கும். இங்ஙனம் துரியாதீத அவத்தையுற்ற உயிர் திரும்பவும் மேல் நோக்கி செல்லும். அப்பொழுது ஒவ்வொரு இடத்தில் விட்ட கருவிகளைச் சேர்த்துச் செல்லும். இந்த இரு நிகழ்வும் கீழாலவத்தை எனப்படும்.

இவற்றை விட நெற்றி நடுவில் உயிர் சாக்கிரத்தில் நிற்கும் நிலையிலும் ஐந்தவத்தைப் படும். இது மத்தியா லவத்தை எனப்படும். இது தவிர மேலாலவத்தை என்ற ஒரு நிலையும் உண்டு. இது யோக நெறியில் நிற்கும் ஆன்மீகப் பயிற்சியுடன் தொடர்புடையது. (விரிவைச் சித்தாந்த நூல்களில் காண்க).

மேற் கூறப்பட்ட அவத்தைகள் உயிரின் வினை அனுபவங்கள், பிறவி எடுத்தல், நீங்குதல் ஆகிய காரியங்களுடன் தொடர்புடையன. அதனால் இவை *காரியாலவத்தை* எனவும் சொல்லப்படும். கேவலம், சகலம், சுத்தம் ஆகிய உயிரின் நிலைகள் *காரணாவத்தை* எனப்படும்.

**9. ஆன்மா அனுபவம் பெறுவதும், அதன் வினையும் பிறவியும் மாறி மாறித் தொடர்ந்து வருவதும் பற்றிய விளக்கங்கள் தரப்பட்டன. இவைகள் இங்ஙனமே தொடர்ந்தால் ஆன்மா விடுதலை பெறுவது எங்ஙனம்?**

வினை அல்லது கன்மத்தின் மூலம் ஆன்மா அறிவு விளக்கம் பெறப்பெற, ஆணவத்தின் பிடி சிறிது சிறிதாக நீங்குகிறது. ஒவ்வொருவரும் வாழ்கில் நற்பண்புக் கூறுகளை வளர்க்க வேண்டுமென்று சைவசமயம் வலியுறுத்துகிறது.

சைவ மக்களின் முழுமுதற் கடவுளாகிய சிவன், மங்களம், அன்பு, அறிவு, தயை, நற்குணம் ஆகியவற்றின் நிறை பொருளாக உள்ளான். சைவன் என்பவன் தன் எண்ணம், சொல், செயல் மூன்றிலும் தான் வணங்கும் சிவனின் தன்மைகளை வளர்க்க வேண்டும். திருமுறைகளைப் பக்தியுடன் பாராயணம் செய்வதும், சித்தாந்த சாத்திர நூல்களைப் படித்துத் தெளிவு பெறுதலும், அகமாற்றத்தை உண்டு பண்ணி சிவனருள் வழியிற் செல்லத் துணை புரியும். இந்நிலையில் இறைவன் எனக்கு அன்னியம் இல்லாதவன், எனக்குள்ளே இருக்கிறான் என்ற உறுதியான நம்பிக்கை பிறக்கும்.



இறைவன் உள்ளிருந்தோ அல்லது குருமூலமோ இந்த உணர்வையூட்டி மெஞ்ஞானத்தை அருளுவான். அப்பொழுது, நான், எனது என்ற உணர்வு நீங்கி, ஆணவத்தின் பிடி தளரும். ஆன்மாவின் தன்னறிவு (உண்மை ஞானம்) ஒளிரும். இந்த நிலை **மலபரிபாகம்** எனப்படும்.

மலபரிபாக அனுபவத்துடன், இன்பம் துன்பம், நல்வினை தீவினை ஆகியவற்றைச் சமமாக நோக்கும் நிலை பிறக்கும். இந்த நிலை **இருவினையொப்பு** எனப்படும். இந்த நிலைகளை அடைந்த உயிர் இறையருளைப் பெறும் பக்குவத்தை அடையும். இந்நிலையில் உயிரை இறையருள் ஆட்கொள்ளும். இது **சத்திநிபாதம்** எனப்படும். சக்தி-இறையருள்; நிபாதம் - கீழ் இறங்கல். இதன்பின் உயிர் தன் பந்த நிலை நீங்கி விடுதலை அடையும். இது **வீடு** அல்லது **முத்தி** எனப்படும்.

**10. உயிரின் பந்த நிலை நீங்குதல், முத்தி அடைதல் ஆகிய இரண்டில், உயிர் பெறும் அனுபவங்கள் நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளனவா?**

பந்த நிலையிலுள்ள உயிரின் பாசம் அகன்று இறைவனை அடையும் வரை உயிர்பெறும் அனுபவ நிலையை பத்துப் படிநிலையில் வைத்து தசகாரியம் என்று சில நூல்கள் விளக்குகின்றன. இவற்றை இரண்டாக, மூன்றாக, முப்பதாக வகுத்துக் கூறும் நூல்களும் உள்ளன. (தசகாரியம் பற்றிய செய்தி இந்நூலில் இறுதியில் 'ஞானச்செயல்' என்ற பகுதியில் தரப்பட்டுள்ளது.)

**11. சொர்க்கம் நரகம் என்பவை என்ன? அவற்றில் உயிர் பெறும் அனுபவம் எத்தகையது?**

உலக வாழ்வில் உயிர் தான் முன் செய்த வினைப் பலன்களை இன்பமும் தும்பமும் கலந்த அனுபவங்களாகப் பெறுகிறது. இறப்பின்பின், மறு பிறவி எடுக்கமுன், அது இடைநிலையில் நின்று இன்பத்தையும துன்பத்தையும் தனித்தனியாக அனுபவிக்கிறது. இன்பத்தை மட்டும் அனுபவிக்கும் இந்த நிலை *சொர்க்கம்* எனப்படுகிறது. துன்பத்தை மட்டுமே அனுபவிக்கும் நிலை நரகம் எனப்படுகிறது. இந்த அனுபவங்களைச் சொர்க்கம் நரகம் ஆகிய நிலைகளில் பெறுவதற்கு ஏற்ற நுண்ணுடம்பு களையும் அது பெறுகிறது. இவை முறையே *பூதசார சரீரம்* என்றும் *யாதனா சரீரம்* என்றும் கூறப்படும். சொர்க்கத்திலும் நரகத்திலும் இன்ப துன்ப அனுபவங்களைப் பெற்றதும் இச்சரீரங்களின் தேவையும் இல்லாமல் போய்விடும். இத்துடன் ஒரு பிறவி வட்டம் (cycle) முடிவுறும். பின்னர் உயிர் இன்னொரு பிறவி எடுத்து வினைப்பலனை அனுபவிக்கும்.

**12. உயிர் ஒரு பிறவியில் செய்யும் வினையின் பலன் உயிரைத் தொடர்ந்து அடுத்த பிறவிகளுக்கு வருவதெப்படி?**

கேவலத்தில் உயிருக்கு இறைவன் படைத்தளித்த நுண்ணுடம்பு புரியட்டகாயம் எனக் கண்டோம். இந்த நுண்ணுடம்பு, உயிர் முத்தியடையும் வரை, உயிருடன் சேர்ந்து சென்று கொண்டே இருக்கும். புரியட்டகாயத்தில் உள்ள புத்தி தத்துவத்தில் வினைப் பலன்கள் புண்ணிய பாவப் பதிவுகளாகத் தங்கி உயிருடன் செல்கின்றன. நல்வினைப் பலன் புண்ணியம், தீவினைப்பலன் பாவம்.



**13. மேற் கூறியவற்றால் ஆன்மா பந்த நிலையிலிருந்து முத்தி அல்லது வீடு அடையும் வரையுள்ள ஆன்ம வளர்ச்சி விளக்கப்பட்டுள்ளது. முத்தியிலும் வெவ்வேறு நிலைகள் உள்ளனவா?**

நான்கு வகை முத்தி நிலைகள் கூறப்படுகின்றன. இவை *பதமுத்தி, அபரமுத்தி, பரமுத்தி, சீவன் முத்தி* என்பவையாகும். இவற்றில் ஆன்மா பெறும் அனுபவ நிலைகளும் நான்காகக் கூறப்படுகின்றன. *சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்* என்பன இவைகள்.

**14. சாலோகம் முதலிய நிலைகளை விளக்குக.**

சிவலோகத்தில் நின்று அங்குள்ள போகங்களை அனுபவிக்கும் உயிர்களின் முத்தி நிலை *'சாலோகம்* எனப்படும். இவர்கள் சரியை நெறியில் ஒழுகி உயர்ந்தவர்கள்.

இப்போகங்களை அனுபவிப்பதோடு சிவபெருமானுக்கு அருகில் (சமீபத்தில்) இருக்கும் பேறு பெற்றவரின் முத்தி நிலை *சாமீபம்* எனப்படும். இவர்கள் கிரியை நெறியில் ஒழுகி உயர்ந்தவர்கள்.

சிவபெருமானின் திருவடிவம் (உருவம்) ஒன்றைப் பெற்று நிற்கும் உயிர்களின் முத்தி நிலை *சாரூபம்*. இவர்கள் யோக நெறியில் ஒழுகி உயர்ந்தவர்கள்.

சிவபுரத்திலுள்ள சிவபெருமானின் திருவடிக் கீழ் இருந்து என்றும் சிவானந்தத்தை அனுபவிக்கும் பேறு பெற்ற உயிர்களின் முத்தி நிலை *சாயுச்சியம்* எனப்படும். ஆணவப் பற்று முற்றாகிய நீங்கிய நிலையில் உள்ளவர்கள் இவர்கள். இவர்கள் ஞானநெறியில் ஒழுகி உயர்ந்தவர்கள்.

**15. பதமுத்தி முதலியவற்றை விளக்குக.**

சாலோகம், சாமீபம், சாரூபம் ஆகிய நிலையில் உள்ளவர் பதமுத்தி அடைந்தவர். இவர்கள் மல வாசனை நீங்கப் பெறாதவர்கள். இதனால் இவர்கள் மீண்டும் பிறவி எடுக்க நேரிடலாம்.

பதமுத்தியில் இருந்து பரமுத்திக்குச் செல்லும் நிலையில் உள்ளவர் அபரமுத்தி அடைந்தவர். இவர்கள் மீண்டும் பிறவி எடுப்பது அரிது.

சாயுச்சிய நிலையில் உள்ளவர்கள் பரமுத்தி அடைந்தவர். இவர்களுக்குப் பிறவி இல்லை.

பதமுத்தி நிலையில் இருந்து உலகில் தோன்றிய அருளாளரின் நிலை சீவன் முத்தி நிலை. இவர்கள் இறையருளால் பிறவி எடுத்தவர்கள். இவர்கள் தன் செயலின்றி சிவன் செயலாகக் கடமையிலீடுபடுபவர்கள். உடம்போடு ஒட்டாதிருப்பது இவர்கள் நிலை.

**16. மேற்கூறியவற்றால் பந்தம் அகன்று முத்தி வரையுள்ள ஆன்மாவின் நிலை விளக்கப்பட்டது. மலபந்தத்திலிருந்து விடுபடுவதுதான் முடிவானதா?**

சமயங்கள் பொதுவாக வீடு அல்லது முத்தியையே முடிந்த நிலையாகக் கொள்கின்றன. பாசத்திலிருந்து விடுதலை அடைந்தபின் ஆன்மா அடையும் பயன் என்ன? என்ற கேள்வி எழுகிறது. முக்திக்குப் பின் உயிர் சிவானந்தத்தில் திளைத்து நித்திய பேரின்பத்தை அனுபவிக்கும் என்று சைவம் கூறுகிறது. வீடு அடைந்தபின் உயிர் பெறும் பேறு இது. இதுவே முடிந்த நிலை. **வீடுபேறு** என்ற தமிழ்ச் சொற்றொடர் இதனைக் குறிப்பதாக உள்ளது.

# 11. திருவைந்தெழுத்து

**1. திருவைந்தெழுத்து என்பதன் பொருள் என்ன?**

திருவைந்தெழுத்து என்பது **ந, ம, சி, வ, ய** என்ற ஐந்து எழுத்துக்களாலான மந்திரம். வடமொழியில் இது பஞ்சாட்சரம் எனப்படும். பஞ்சாட்சரம் = பஞ்ச அட்சரம் = ஐந்து எழுத்து. திருமுறைகளில் இம்மந்திரம் ஐந்தெழுத்து, அஞ்சுபதம் போன்ற பெயர்களால் குறிக்கப்படுகின்றன.

**நமசிவய** என்பது தூல பஞ்சாட்சரம் என்றும் **சிவயநம** என்பது சூக்கும பஞ்சாட்சரம் என்றும் கூறப்படுகின்றன. இவற்றை உச்சரிக்கும் போது நமச்சிவாய, சிவாயநம என்று வருகின்றன. இவை தவிர அதிசூக்கும பஞ்சாட்சம், காரண பஞ்சாட்சரம், மகாகாரண பஞ்சாட்சரம் என்றும் மந்திரங்கள் உள்ளன. இவை ஒன்றை விட ஒன்று நுண்மையானவை. சூக்குமம் நுண்மையானது; தூலம் பருமையானது.

**2. 'மந்திரமாவது நீறு' என்பது சம்பந்தபெருமானின் அருள் வாக்கு. திருநீறு எப்படி மந்திரமாக அமையும்?**

மந்திரம் என்பதற்கு நினைப்பவரை (அல்லது சொல்பவரைக்) காப்பது என்பது பொருள். திருவைந்தெழுத்து ஓதுபவரைக் காக்கும் என்பதால் மந்திரமாகிறது. (மந் - நினை; த்ர-காப்பாற்று). எது எமக்குக் காவலாக உள்ளதோ அது மந்திரமாகிறது.

திருநீற்றை அணியும் போது 'சிவ சிவ' என்று சொல்லி அணியவேண்டும். இப்படி அணிவது சைவ மரபாக உள்ளது. இவ்வாறு திருநீற்றைப் பூசும் பொழுது

அது மந்திரமாகிறது. சிவசிவ என்பது காரணபஞ்சாட்சரம். இது சிவயநம என்னும் சூக்கும பஞ்சாட்சரத்திலும் பார்க்க நுண்மையானது.

**3. நமச்சிவாய என்பது சிவனின் திருநாமமாகவும் இருக்கிறதல்லவா?**

ஆம். "நாதன் நாமம் நமச்சிவாயவே" என்ற தேவாரத் தொடர் இதனை விளக்குகிறது. 'நமசிவாய' வில் 'ச்' சேர்த்தால் சிவன் பெயராகிறது. இதனைச் சிவன் நாமமாக ஓதினாலும் மந்திரமாக ஓதினாலும் ஓதுபவர் அதிக பலன் பெறுவர்.

**4. திருவைந்தெழுத்துக் குறித்த சைவசித்தாந்த விளக்கம் என்ன?**

**நமசிவய** என்ற மந்திரத்தில் 'ந' திரோதானத்தையும், 'ம' மலத்தையும், 'சி' சிவனையும், 'வ' அருளையும், 'ய' உயிரையும் குறிக்கின்றன. இதில் 'ய' குறிக்கும் உயிர் பின்னிற்க, உயிரைப் பற்றிய மலம் (திரோதானமும் ஆணவமலமும்) முன்னிற்கின்றன. **சிவயநம** என்ற மந்திரத்தில் சிவனும் அருளும் முன்னிற்க, மலம் பின்னிற்க, உயிர் நடுவில் உள்ளது. எனவே **சிவயநம** என்று ஓதும்பொழுது இறையருள் எம்மை முன்னின்று வழிநடத்துகிறது. **நமசிவய** என்று ஓதும் பொழுது மலமும் இறையருளும் வழிநடத்துகின்றன.

**5. தூல பஞ்சாட்சரம் உலகியல் நாட்டமுடையவருக்கு என்றும் சூக்கும பஞ்சாட்சரம் இறையருள் நாட்டம் உடையவருக்கு என்றும் கூறப்படுகின்றன. இது குறித்த விளக்கமென்ன?**

உலகியல் நாட்டம் உடையவர் தூல பஞ்சாட்சரத்தை ஓதுவது நல்லது, இறையருளை விழைபவர் சூக்கும பஞ்சாட்சரத்தை ஓதுவது நல்லது என்று சில நூல்களிலும் கூறப்பட்டுள்ளன. தூல பஞ்சாட்சரத்தை ஓதுவதால் உலகியல் நாட்டம் குறைந்து இறையருள் நாட்டம் பிறக்கும். சூக்கும பஞ்சாட்சரம் இறையருளுக்கு உயிரைச் செலுத்தும்.



**6. பிரணவ மந்திரமும் திருவைந்தெழுத்து மந்திரமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதென்று கூறப் படுகிறது. இத்தொடர்பு எத்தகையது?**

**ஓம்** என்பது பிரணவ மந்திரம். ஓங்காரம் என்றும் இது கூறப்படுகிறது. **அ, உ, ம்** என்ற மூன்றெழுத்துக்களை உள்ளடக்கியது இது. **அ** என்பது சிவனையும் **உ** என்பது உயிரையும் **ம்** என்பது மலத்தையும் குறிக்கின்றன என்பது பொதுவான கருத்து.

சிவனிற் பிரிவில்லாதது அவனின் அருளாகிய சக்தி. இதனால் பிரணவத்திலுள்ள 'அ' சிவனையும் அவனின் அருளையும் குறிப்பதாய் அமைகிறது. இதனால் பஞ்சாட்சரத்திலுள்ள 'சிவ' என்ற பதம் 'அ' வின் விரிவாக இருக்கிறது. பிரணவத்தின் 'உ' வும் பஞ்சாட்சரத்தின் 'ய'வும் உயிரைக் குறிக்கின்றன. பிரணவத்திலுள்ள 'ம்' என்பதிலுள்ள 'ம' மலத்தையும் அதன் மேலுள்ள புள்ளி திரோதானத்தையும் குறிப்பன என்பர். இதனால் பஞ்சாட்சரத்திலுள்ள 'நம' என்ற பதம் பிரணவ மந்திரத்தின் 'ம்' என்பதன் விரிவாக உள்ளது. எனவே பிரணவ மந்திரத்தின் விரிவே பஞ்சாட்சரம் என்பது பெறப்படுகிறது.

**ஓம்** என்ற மந்திரம் அ + உ + ம + விந்து (புள்ளி) + நாதம் என்ற ஐந்து கூறுகளின் சேர்க்கையாகவும் உள்ளது.

இவையே பஞ்சாட்சரமாக விரியும் என்ற கருத்தும் உள்ளது. இந்த ஐந்து கூறுகளின் கூட்டாக அமைந்த ஓங்காரம் சமஷ்டிப் பிரணவம் எனப்படும். (சமஷ்டி - கூட்டு). அது விரியும் நிலையில் வியஷ்டிப் பிரணவம் எனப்படும். (வியஷ்டி - விரிதல்).

**7. இறைவன் கொண்ட திருமேனி மந்திரத் திருமேனி என்று கூறப்படுகிறது. இது குறித்த விளக்கம் என்ன? எந்த நூலில் இதனைக் காணலாம்?**

இறைவன் கொண்ட திருமேனி மந்திரத் திருமேனி என்ற கருத்துள்ள நூல்கள் உண்டு. *உண்மை விளக்கம்* என்ற நூல் ஆடும் கூத்தனாக இறைவன் கொண்ட திருமேனி திருவைந்தெழுத்தால் ஆனது என்றும், உயிர்களின் பிறவித் தொடர் அறும்படி ஐந்தெழுத்து மந்திரத்தால் ஆடுகிறான் என்றும் விளக்குகிறது. அம்பலத்தானின் திருவடி 'ந'காரம், திருவயிறு 'ம'காரம், திருத்தோள் 'சி'காரம், திருமுகம் 'வ'காரம், திருமுடி 'ய'காரம். இவ்வாறு திருவைந்தெழுத்தால் அமைந்த மந்திரத் திருமேனி அவனுடையது. திருவடியிலிருந்து திருமுடிவரை (பாதாதிகேசமாக) 'நமசிவாய' போல் அமைந்துள்ளது என்று உண்மை விளக்கம் நூல் கூறுகிறது.

திருமுடியிலிருந்து திருவடிவரை (கேசாதிபாதமாகப்) பார்த்தால் கூத்தப்பிரானின் அவயவ அமைப்பு 'சிவாயநம' போல் அமைந்தள்ளது என்றும் உண்மை விளக்கம் கூறுகிறது. உடுக்கேந்திய திருக்கரம் 'சி'காரம், தூக்கிய திருவடியைக் காட்டும் இடது திருக்கரம் 'வ'காரம், அபயகரமான வலது திருக்கரம் 'ய'காரம், தீ ஏந்திய திருக்கரம் 'ந'காரம், முயலகனை அழுத்தும் வலது திருக்கால் 'ம'காரம். இவ்வாறு அமைந்துள்ளது.



**8. திருவைந்தெழுத்து மந்திரம் வேறெதனை உணர்த்துகிறது?**

இறைவனின் ஐந்தொழிலையும் உணர்த்துகிறது. சி - படைத்தல், ய - காத்தல், ந - அழித்தல், ம - மறைத்தல், வ - அருளல். இதனால் இப்பதங்கள் கூத்தப் பெருமான் ஐந்தொழில் புரியும் அவையவங்களையும் குறிப்பதாகின்றன. அவனின் திருவாசி *ஓம்* என்ற வடிவைக் கொண்டது.

ஆடும் கூத்தனின் திருநடனம் இரு நிலைகளில் நிகழ்கிறது. ஒரு நிலையில் ஆன்மாக்கள் உலகியலில் திளைத்து வளர்ச்சி பெறுவதற்காக நிகழ்கிறது. இது அவனின் *ஊன நடனம்* எனப்படும். இன்னொரு நிலையில் இறை ஞானம் பெற்று முத்தி அடைவதற்காக நிகழ்கிறது. இது அவனின் *ஞான நடனம்* எனப்படும். ஆன்மா இரண்டிற்கும் நடுவில் நின்று உலகியல் அனுபவத்தையும் சிவானந்தத்தையும் பெறவேண்டும். திருவருட் பயன் '*ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம் ஞான நடனம் தான்நடுவே நாடு*' என்று கூறி உணர்த்துகிறது. திருவைந்தெழுத்திலுள்ள 'சிவ' என்ற பதம் ஞான நடனத்தையும் 'நம' என்ற பதம் ஊன நடனத்தையும் குறிக்கின்றன. 'ய' என்ற உயிரைக் குறிக்கும் பதம் நடு நின்று இரண்டையும் அனுபவிக்கிறது.

**9. மந்திரங்களில் உயர்ந்த மந்திரம் திருவைந்தெழுத்து என்பதற்கு ஆதாரம் என்ன?**

நூல்களும், அருளாளரின் சொல்லும் செயலும் இதற்கு ஆதாரமாக உள்ளன. இறைவனே திருவைந்

தெழுத்து வடிவமாக நிற்கிறான் என்று உண்மை விளக்கம் போன்ற நூல்கள் கூறுகின்றன. திருமந்திரம் இம் மந்திரம் குறித்து விரிவாகக் கூறுகிறது. சம்பந்தர் அப்பர் போன்ற அருளாளர் திருவைந்தெழுத்து மந்திரத்தின் துணையால் அற்புதங்கள் செய்துள்ளனர். அந்தணர்கள் காயத்திரி மந்திரத்துக்கு உயர் இடம் அளிப்பது பொதுவாகக் காணக்கூடியது. அவர்களுக்கு இறுதியில் துணை நிற்பது திருவைந்தெழுத்து மந்திம் என்று சம்பந்தப் பெருமான் கூறுகிறார். "செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்பது அவரின் திருவாக்கு.

# 12. ஞானச் செயல்

**1. ஞானச் செயல் என்று இங்கு கூறப்படுவது எது?**

பாசத்தினால் கட்டுண்ட உயிரின் அறிவு விளங்கி, பாசப் பொருள்களை அறிந்து, தான் பாசத்திலிருந்து வேறானது என உயிர் தெளிந்து, பரம்பொருளைச் சார்ந்திருப்பதே தனது இயல்பு என்பதை உணர்ந்து வீடு பேறு அடையும். இச்செயல்கள் யாவும் அறிவின் செயல்களே; உடம்பின் செயல்களல்ல. பாசகட்டு அகன்று சிவத்தை அடையும் வரையுள்ள இச்செயல்கள் *ஞானச் செயல்* என்று இங்கே குறிக்கப்படுகின்றன.

**2. மேற்கூறப்பட்ட செயல்களில் ஞானம் எத்தனை வகையாக விளங்குகிறது?**

மேற் கூறப்பட்டவைகள் ஆன்மாவின் வளர்ச்சியில் காணப்படும் சில படி நிலைகள். ஆன்ம வளர்ச்சியில் விளங்கும் அதன் ஞானத்தை மூன்று வகையாகப் பிரிப்பதுண்டு. அவை *பாச ஞானம், பசு ஞானம், பதி ஞானம்* என்பன.

**3. இவற்றை விளக்குக.**

உலகியலில் ஆன்மா பெறும் அறிவு உடம்பின் கருவிகள் மூலம் வருவது; பாசப் பொருட்களின் தொடர்புடையது. பாசத்தின் வழியில் உயிர் பெறும் அறிவு *பாச ஞானம்* எனப்படும். பாச ஞானத்தினால் பாசத்தைக் கடந்த மெய்ப்பொருளை அறியமுடியாது.

உயிரின் பாசபந்தம் நீங்கி, உடம்பு முதலிய தத்துவங்களாலான பாசக்கருவிகள் தானல்ல, தான் வேறு

அவை வேறு என்று காணும் அறிவு *பசு ஞானம்* எனப்படும். இதனாலும் பதியாகிய இறைவனை அறியமுடியாது.

பாச ஞானமும் பசு ஞானமும் கடந்த திருவருள் ஞானம் ஒன்று உண்டு. அது *பதி ஞானம்* என்று கூறப்படுகிறது. திருவாசகத்தில் காணும் "அவனருளாலே அவன் தாள் வணங்கி", என்ற தொடர் குறிப்பது இப்பதி ஞானத்தையே.

உயிர் கருவிகள் மூலம் அறிவு பெறுகிறது என்று எண்ணும் நிலை பாச ஞானம். தனக்குள்ளிருந்து அறிவிக்கும் சிவனை அறியாமல் தானே தன் முயற்சியால் அறிகிறேன் என்று எண்ணும் நிலை பசு ஞானம். இறைவனாலே தான் அறிகிறேன் என்று எண்ணும் நிலை பதி ஞானம்.

**4. மேற்சொன்ன மூவகை ஞானங்களில் ஒன்றினால் மட்டும் இறைவனைக் காண முடியாதா?**

பாசஞானம் கண் முதலிய ஞானேந்திரியங்கள் மூலமும், மனம் முதலிய அந்தக்கரணங்களின் மூலமும், அவற்றின் செயல் தொடர்பான மற்றைய தத்துவங்களின் துணையாலும் வருவது. இந்த ஞானத்தால் தத்துவங்களைக் கடந்த பரம்பொருளைக் காணமுடியாது. அந்தக் கரணங்கள் முதலியன செயலற்றுக் கல் (பாடாணம்) போல் இருப்பதே முத்தி நிலை என்று பாடாண வாதிகள், யோக மதத்தினர் என்னும் சமய வகையினர் கூறுவர். அவ்வாறாயின் இவைகள் செயலற்றுக் கிடக்கும் மரணமும் முத்தியென்று கருதப்பட நேரிடும். கருவி கரணங்கள் செயற்படாது மயங்கிக் கிடக்கும் நிலையும் முத்தி என்று கருத வேண்டிவரும்.



என்னால் அறியமுடிந்தது என்ற பசு ஞானத்தில், நான், எனது என்ற ஆணவக் கலப்பு உள்ளது. நானே இறைவன் என்று எண்ணுவதும் பசு ஞானத்தால் விழைவது. நின்மலனாகிய இறைவனை மலத் தொடர்புடைய பசுஞானத்தினால் அறியமுடியாது. 'அகம் பிரமாஸ்மி' (நான் பிரமம் ஆகிறேன்) என்று நம்பும் ஏகான்மவாதிகள் போன்றோராலும் முத்தியடைய முடியாது. இவர்கள் கொள்கைகள் ஊகத்தின் அடிப்படையில் எழுந்தவை என்றும், அவர்கள் பெறும் ஞானம் பாசஞானம், பசுஞானம் என்பவை என்றும் கருதப்படும்.

**5. 'அகம் பிரமாஸ்மி' போன்ற வேத மகா வாக்கியங்கள் குறித்த சைவ சித்தாந்த விளக்கம் என்ன?**

அகம் பிரமாஸ்மி (நான் பிரமமாகிறேன்), தத்வமஸி (நீ அது ஆகிறாய்) என்பன வேத மகா வாக்கியங்கள். 'நான் பிரம்மமாகிறேன்' என்றால் நானும் இறுதி நிலையில் பிரமம் (கடவுள்) தான் என்பது பிறமதத்தவரின் விளக்கம். நான் பிரமமாந் தன்மையை அடைகிறேன்; ஆனால் நான் வேறு பிரம்மம் வேறு, என்பது சைவசித்தாந்திகள் தரும் விளக்கம். இத்தகைய விளக்கங்கள் 'தத்வமஸி' என்பதற்கும் தரப்படுகின்றன. எந்த நிலையிலும் உயிர் வேறு, இறை வேறு என்பது சித்தாந்தச் கொள்கை. நான் பிரமம் என்ற ஞானம் பசுஞானம்.

ஆனால், ஆன்மீக சாதனையில் ஈடுபடும் மாணாக்கன் தன்னை இறைவனாகப் பாவனை செய்து பயிற்சி பெறுவது தேவையாகிறது. குருவும் இத்தகைய பாவனையைக் கொண்டிருப்பர். *சிவோஹம்பாவனை* என்பது சிவம் உள்ளத்தில் இருப்பதாக (சிவ + அகம் +

பாவனை) பாவனை செய்தல். இதனால் மாணவன், ஆசிரியர் இருவரின் உள்ளத்திலும் சிவசிந்தனை நிலைத்திருக்கும்; சிவத்தோடு ஒன்றியிருக்கும் நிலை பிறக்கும்; பயிற்சி எளிதாகும். அகம் பிரமாஸ்மி போன்ற வேத மகா வாக்கியங்களும் இந்த நோக்கில் குருவால் மாணாக்கருக்கு உபதேசிக்கப் பட்டவை என்பர்.

**6. தசகாரியம் என்பதில் வரும் அனுபவ நிலைகள் யாவை?**

தசகாரியம் என்பதில் வரும் பத்துப் படி நிலைகள் வருமாறு :

1. தத்துவரூபம், 2. தத்துவதரிசனம், 3. தத்துவசுத்தி, 4. ஆன்ம ரூபம், 5. ஆன்மதரிசனம், 6. ஆன்மாசுத்தி, 7. சிவரூபம், 8. சிவ தரிசனம், 9. சிவயோகம், 10. சிவபோகம்.

மேற்கூறப்பட்ட பத்து நிலைகளும் ஆன்மா ஞான விளக்கம் பெறும் முறைகளை உணர்த்துவன. இந்நிலைகளில் தத்துவம், ஆன்மா, சிவம் ஆகியவை தொடர்புற்று நிற்பதைக் காணலாம். இவை பாசம், பசு, பதி ஆகிய முப்பொருள்கள் என்பது சிந்தனைக்குரியது.

**7. இப்பத்து நிலைகளையும் விளக்குக.**

நாம் ஒரு பொருளைப் பார்க்கும் பொழுது, அதனை முதலில் பொது வகையால் காண்கின்றோம். பின்னர் அது ஏதாக இருக்கும் என்ற ஐயத்தோடு காண்கிறோம். அதன்பின் அதனைப் பற்றிய தெளிவு உண்டாகிறது. இந்த மூன்று நிலைகளும், ஒன்றன்பின் ஒன்றாக கணப் பொழுதுக்குள் நடக்கின்றன. இவ்வாறு பொது வகையில் காண்பது ரூபம், ஐயத்தில் காண்பது தரிசனம், தெளிவு



உண்டாவது சுத்தி என்பதை மனதில் கொண்டால் இவற்றை விளங்குவது எளிதாக இருக்கும்.

முப்பத்தாறு தத்துவங்களையும் அவற்றின் தன்மையையும் படித்து கேட்டு பொதுவகையாக அறிவது தத்துவரூபம். இங்ஙனம் அறிந்தவை சரியானவையா தவறானவையா என்று எண்ணிப் பார்த்தல் தத்துவ தரிசனம். இதில் சரியா தவறா, தத்துவங்களே நாமா என்பனபோன்ற ஐயங்கள் எழும். இதன்பின் படித்துக் கேட்டு அறிந்த தத்துவங்கள் அறிவற்ற சடப்பொருள்கள், நாம் அவையினும் வேறானவர் என்ற தெளிவு பிறக்கும். இதனால் தத்துவப் பொருட்களை சார்ந்திருக்கும் நிலை நீங்கும். இது தத்துவசுத்தி.

மேற்காட்டியவாறு உயிர் வேறு, தத்துவங்கள் வேறு எனவும், உயிரின் இயல்பு என்ன என்பதையும் நூல்களின் மூலமும் குரு மூலமும் அறிந்து கொள்ளுதல் ஆன்ம ரூபம். இவற்றைச் சிந்தித்து ஆராய்தல் ஆன்ம தரிசனம். இதில் உயிர் அறிவுப்பொருள் என்றாலும் இறைவன் அறிவித்தால் மட்டும் அறியும் பொருள் என்பது விளங்கும். ஆயினும் இது தெளிவற்று ஐயத்துக் கிடமானதாக இருக்கும். இந்த ஐயநிலை நீங்கி இறையருள் வழியில் தனது சிந்தனை செயல் நடைபெறுகின்றது என்ற தெளிவுண்டாகி, நான் எனது என்ற கர்வம் நீங்கிய நிலை ஆன்மசுத்தி.

சிவரூபம் என்பது சிவத்தின் இயல்பை நூல்கள் மூலமும் குரு மூலமும் அறிந்திருப்பதாகும். நான், எனது என்ற கர்வம் அகன்று, எல்லாம் அவன் செயல், எங்கும் அவனே உள்ளான், என்று உணர்ந்திருக்கும் நிலை சிவ தரிசனம். இந்த நிலையிலும் பழைய பழக்கத்தால் (மல வாசனையால்) நான் செய்தேன், என்னால் ஆனது போன்ற

தற்போதம் எழலாம். அதனைக் கொள்ளாமல் சிவனருளில் ஒன்றியிருத்தல் சிவயோகம். (யோகம் - ஒன்றியிருத்தல்). இந்த நிலை வந்தபின் உயிர் தன் செயலற்றுச் சிவானந்தத்தில் அழுந்தி இன்பம் அனுபவிக்கும் நிலை உண்டாகும். இது சிவபோகம்.

**8. ஐயக்காட்சி, தெளிவுக் காட்சி ஆகியவற்றை விளக்குக.**

நாம் ஒன்றைக் காணும் போது, அதனை எமது பொறி புலன்களின் மூலம் காண்கிறோம். அப்பொழுது அதன் பொருள், குணம் ஆகியவை உடனே தெரிவதில்லை. இது *பொதுக் காட்சி* எனப்படும். *வாயிற்காட்சி* எனவும் கூறப்படும். இந்திரியங்கள் மூலம் அறிவதால் *இந்திரியக் காட்சி* எனவும் இதனைக் கூறுவர். தசகாரியத்தில் ரூபம் என்று முடியும் நிலைகள் இக்காட்சி சார்ந்தவையாகும். கண்ட பொருளை இதுவோ அதுவோ என்று துணிந்து சொல்ல முடியாதவாறு ஐயத்துடன் எமது அறிவு ஆராயும். இது *ஐயக்காட்சி*. தரிசனம் என்று தசகாரியத்தில் வரும் நிலைகள் இக்காட்சியாகும்.

தெளிந்து நிச்சயித்துக் காணல் *தெளிவுக்காட்சி*. தத்துவ சுத்தி, ஆன்மசுத்தி, சிவயோகம், சிவபோகம் ஆகிய நிலைகள் இந்தக் காட்சியைச் சார்ந்தவையாகும்.

**9. மேற்கூறப்பட்ட பத்து நிலைகளும் ஒன்றன்பின் ஒன்றாகத்தான் வருமா?**

இல்லை. ஒன்று நிகழும்போதே இன்னொன்றும் நிகழும். ஆன்ம ரூபத்தில் தத்துவரூபம், தத்துவதரிசனம் ஆகிய இரண்டும் நிகழும். இது போல பிற நிலைகள் சிலவற்றிலும் இத்தகைய நிகழ்வுகளைக் கூறலாம்.

# 13. சைவசித்தாந்த நூல்கள்

**1. மெய்கண்ட சாத்திர நூல்கள் எப்பொழுது எழுதப்பட்டன?**

மெய்கண்ட சாத்திர நூல்கள்சைவ ஞானிகளால் 12-ம் நூற்றாண்டுக்கும் 14-ம் நூற்றாண்டுக்கும் இடையில் எழுதப்பட்டவை.

**2. சைவ சித்தாந்தத் துறையில் மெய்க்கண்ட தேவரின் இடமென்ன? சந்தான குரவர் யார்?**

சைவசித்தாந்தத் துறையில் அதி உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்படுபவர் *மெய்க்கண்டார்*. சந்தான குரவர் என்னும் சைவஞானிகள் பரம்பரையின் முதற்குரவர் இவர். தமிழர்கள் பின்பற்றும் சைவ சமயம் சித்தாந்த சைவம் எனப்படும். இது மெய்க்கண்டார் வழியில் அமைந்த சைவத் துறையாகும்.

சந்தான குரவரில் இரண்டாவதாக நிற்பவர் மெய்கண்டாரின் மாணாக்கரான *அருணந்தி சிவாசாரியர்*. இவரின் மாணாக்கர் *மறைஞானசம்பந்தர்*. அவரின் மாணாக்கர் *உமாவதி சிவாசாரியார்*. இந்நால்வரும் சைவ சமயத்தில் சந்தான குரவர் எனப்படுவர்.

**3. சந்தான குரவர், சமய குரவர் ஆகியோருக் கிடையிலுள்ள வேறுபாடு என்ன?**

சந்தான குரவர் குரு சீடன் முறையில் ஒருவர் பின் ஒருவராக, சந்தானமாக வந்தவர்கள். சமய குரவர் இந்த முறையில் வந்தவர்களல்ல. குரு சீடன் உறவு அவர்களுக் கிடையில் இல்லை.

**4. மெண்கண்டாருக்குமுன் குரு சீட பரம்பரை இருந்ததில்லையா?**

மெய்கண்டாரின் குருவாக அமைந்தவர் *பரஞ்சோதி முனிவர்*. அவரின் குரு *சத்தியஞானதர்சினி*. அவரின் குரு *சனற்குமாரர்*. அவரின் குரு *திருநந்தி தேவர்*. இந்நால்வரும் கைலாசத்தில் இருப்பவர்கள். இவர்கள் *அகச்சந்தான குரவர்* எனப்படுவர். மெய்க்கண்டார், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம் ஆகியோர் *புறச்சந்தான குரவர்*. இந்நால்வரும் பொதுவாக சந்தான குரவர் என்று அழைக்கப்படுவர்.

மேற்குறிப்பிட்ட குரவர்களுக்கு ஆதி குருவாகச் சிவ பெருமானே தட்சணாமூர்த்தி வடிவில் நின்று சிவஞான விளக்கம் (சிவஞானபோதம்) அருளினார். இதனால் அவரே சிவஞானபோதம் அருளிய முதற்குரு என்று கொள்ளப் படுகிறது. (சிவஞான போதம் – சிவஞானம் பற்றிய அறிவு).

**5. கைலாயத்திலிருக்கும் பரஞ்சோதி முனிவர் பூமியில் வாழ்ந்த மெய்கண்டாருக்குக் குருவாக அமைந்தது எங்ஙனம்?**

பரஞ்சோதி முனிவர் வடக்கே சைலாசத்திலிருந்து தெற்கே பொதிகையை நோக்கி வான்வழிப் போகும் பொழுது, மண்ணில் வாழ்ந்த சுவேதவனப்பெருமாளின் (மெய்கண்டாரின் இயற்பெயர்) பக்குவநிலையை உணர்ந்து அவருக்கு ஞானஉபதேசம் செய்தார். இதனால் அவர் குருவாக அமைந்தார்.

**6. சிவஞானபோதம் நூலின் முக்கியத்துவம் என்ன?**

மெய்கண்டாரால் எழுதப்பட்டது **சிவஞான போதம்**. சைவ சித்தாந்த தத்துவத்துவத்தின் முதன்மை நூலாக (primary text) இது கொள்ளப்படுகிறது. தர்க்க முறையில் சிறந்து விளங்கி சைவசமய தத்துவத்தைத் திறம்பட விளக்கும் நூல் இது. மேற்குலகின் அறிஞரான ஜோன் பயற் என்பவர் உலகில் தர்க்கமுறையில் அமைந்த மிகச் சிறந்த தத்துவ நூல் இது என்று போற்றுகிறார்..(*`One of the most closely reasoned religious philosophies found anywhere in the world'*. - John H. Piet)

சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்ட மிகச் சிறிய நூல். ஆனால் இதற்கு உரை நூல்கள் பல உண்டு. மிகவும் பெரிய விரிவான உரைநூல் *சிவஞான முனிவர்* எழுதிய *சிவஞான மாபாடியம்*.

**7. மற்றைய மெய்கண்ட சாத்திர நூல்கள் எவை?**

தர்க்க முறையில் அமைந்த சிறந்த நூல் **சிவஞான சித்தியார்.** சிவஞான போதத்தின் விளக்கமாக அமைந்தது இது. பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பகுதிகளைக் கொண்டது இந்நூல். நூல் ஆசிரியர் காலத்துப் பிற தத்துவக் கருத்துக்களின் பொருந்தாமையை விளக்கி மறுத்துரைப்பது பரபக்கம். சைவ சித்தாந்த தத்துவத்தை விளக்குவது சுபக்கம். இதன் ஆசிரியர் சந்தான குரவரில் ஒருவராகிய சகலாகம பண்டிதர் எனப்படும் அருணந்தி சிவாசாரியார். இவர் எழுதிய இன்னொரு மெய்கண்ட நூல் **இருபா இருபஃது.**

**உண்மை விளக்கம்** என்ற நூல் *திருவதிகை மனவாசங்கடந்தார்* என்பவரால் எழுதப்பட்டது. இவர் மெய்கண்டாரின் ஒரு மாணாக்கராக விளங்கியவர். பதி, பசு, பாசம் பற்றியும், சித்தாந்தம் கூறும் முப்பத்தாறு தத்துவங்கள் பற்றியும் இந்நூல் கூறுகிறது. சிவனின்

திருநடனம், திருவைந்தெழுத்து, முத்தி நிலை ஆகியவை பற்றிய விளக்கங்களையும் இதில் காணலாம். சைவ சித்தாந்த மாணவர்கள் முதலில் இதனைப் படிப்பது பயன் தரும்.

*திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்* என்பவர் எழுதிய நூல் **திருவுந்தியார்**. *திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்* என்பவர் எழுதிய நூல் **திருக்களிற்றுப் படியார்**. இந்நூல்கள் இரண்டும் சிவஞானபோதத்திற்கு முன் வெளி வந்தவை.

சந்தான பரம்பரையில் இறுதியாக வந்த உமாபதி சிவாசாரியார் எட்டு நூல்களை எழுதியுள்ளார். இத்தொகுதி *சித்தாந்த அட்டகம்* எனப்படும். இவற்றில் ஒன்றான **சிவப்பிரகாசம்** சிவஞான சித்தியார் போல் சிறப்புமிக்கது. சிவஞானபோதம், சிவஞானசித்தியார் ஆகிய நூல்களின் கருத்துக்களைப் பிரதிபலிப்பதுடன் புதிய நோக்கில் சித்தாந்தக் கருத்துக்களைத் தருவது இந்நூல். **உமாபதி** சிவத்தின் பிறநூல்கள், **திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, சங்கற்ப நிராகரணம், உண்மைநெறி விளக்கம்** என்பவையாகும்.

**8. சைவ சித்தாந்தம் பற்றிய வேறு முக்கிய நூல்கள் சில கூறுக?**

மெய்கண்ட நூல்களுக்கு முன் வந்த ஒரு நூல் *ஞானாமிர்தம்*. இதன் ஆசிரியர் வாகீசமுனிவர். மெய்கண்ட நூல்களுக்குப் பின்வந்த இரு நூல்கள் *துகளறுபோதம், ஒழிவிலொடுக்கம்* என்பவை. இவற்றின் ஆசிரியர்கள் முறையே *சிற்றம்பலநாடிகள், காழிக் கண்ணுடைய வள்ளல்* ஆவர். *தத்துவப் பிரகாசம், சிவநெறிப் பிரகாசம், சைவ சமய நெறி, சிவதிருமோத்திரம், தத்துவரத்னாகரம்* ஆகியவை வேறு சில நூல்கள்.



சைவத் திருமடங்களின் ஞானிகளால் எழுதப் பட்டவை *பண்டார சாத்திரங்கள்* என்ற பெயரில் உள்ளன. உமாபதி சிவமும் வேறு ஞானிகளும் வடமொழியில் எழுதிய நூல்களும் உள்ளன. ஈழத்து அறிஞர்கள் சிலரும் எழுதியுள்ளனர். இவர்களுள் குப்பிளான் *காசிவாசி செந்தி நாதையர்*, சைவப் பெரியார் *சிவபாதசுந்தரம்*, அச்சுவேலி *குமாரசுவாமிக் குருக்கள்*, ஏழாலை பண்டிதர் *கந்தையா* ஆகியோர் குறிப்பிடத் தக்கவர். சித்தாந்த நூல்களுக்குச் சிறந்த உரை எழுதியவரும் உள்ளனர். இவரில் *மு. திருவிளங்கம்* குறிப்பிடத்தக்கவர்.

**9. சந்தான குரவரில் ஒருவராகிய மறைஞான சம்பந்தர் ஏதாவது நூல் எழுதியுள்ளாரா?**

இல்லை. அவர் அருணந்திசிவத்தின் மாணாக்கராகவும் உமாபதி சிவத்தின் குருவாகவும் இருந்த ஞானியாவார்.

**10. தமிழ் வேதம் எனப்படும் திருமுறைகளுக்கும் சித்தாந்த நூல்களுக்கும் உள்ள தொடர்பு எத்தகையது?**

சைவ சித்தாந்தக் கருத்துக்கள் திருமுறைகளில் விரவி இருக்கின்றன. சைவ சித்தாந்தத்துக்கு உடன்பாடான கருத்துக்களைத் திருமுறைகளில் காணலாம், மாறான கருத்துக்களைக் காணமுடியாது. திருமுறைகளுக்குத் தெளிவான பொருள் காண்பதற்கு சைவ சித்தாந்த அறிவு தேவை. அவற்றைச் சைவ சித்தாந்த ஞானப் பின்னணியிலே விளக்க வேண்டும்.

**11. சைவ சித்தாந்த கருத்துக்களுக்கு மூலம் சைவ ஆகமங்கள் என்ற கருத்துண்டு. இன்று இந்த ஆகம நூல்கள் பல இல்லை. இது சைவத்துக்குப் பெருங்குறையல்லவா?**

சைவ ஆகமங்களின் ஞானபாதக் கருத்துக்களே சித்தாந்தக் கருத்துக்களாக உருவாயின என்று கூறுவர். இதனாலேயே சைவ சித்தாந்தத்தை *ஆகமாந்தம்* என்று கூறுவதும் உண்டு. சைவ ஆகம நூல்கள் பலவற்றை நாம் இழந்து விட்டோம் என்பது உண்மையே. இது ஒரு பெருங்குறையே. ஆயினும் இறையருளால் ஆகமங்களில் உள்ள தேவையான சித்தாந்தக் கொள்கைகள் ஞானிகளால் பதினான்கு மெய்கண்ட நூல்களில் தரப்பட்டுள்ளன. இந்த ஞானிகள் ஆகமங்களில் தெளிந்த ஞானம் உள்ளவராக விளங்கினார்கள். அருணந்தி சிவாசாரியாரை *சகலாகம பண்டிதர்* என்று அழைப்பதே இதனை உணர்த்துவதாக உள்ளது. அகவே சைவ சித்தாந்தம் படிப்பதற்கு ஆமகங்கள் இல்லாதது ஒரு குறையல்ல. ஆனால், மெய்க்கண்ட நூல்கள் தமிழில் இருப்பதால், தமிழ் மொழி அறிவு இல்லையாயின், அது ஒரு குறையாகும்.

**12. திருக்குறள் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான ஒரு நூல் எனக் கூறப்படுகிறது. ஆனால் இது ஒரு சைவ நூல் என்று சைவர்கள் கருதுகிறார்கள். இது குறித்த விளக்கம் என்ன?**

சைவ சித்தாந்தக் கருத்துக்கள் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளக் கூடிய பரந்த நோக்கில் அமைந்த, அறிவியற் கருத்துக்கள். ஆகவே தமிழகத்துத் தத்துவமான



சைவசித்தாந்ததில் பிற சமயக் கருத்துக்கள் சிலவும் பிரதிபலிக்கப்படுவது இயல்பானது.

திருக்குறள் நூல் மனித சமுதாயத்துக்குப் பயன்படும் வகையில் பரந்த நோக்கில் எழுதப்பட்டது. இதனால் இதில் பிற மதத்தவரின் கொள்கைகளும் இடம் பெறுகின்றன. ஆயினும் திருக்குறட் கருத்துக்கள் அனைத்தும் எல்லாச் சமயங்களுக்கும் உடன்பாடானவை அல்ல என்பது கருதற்பாலது. சைவ சமயத்துக்கோ அல்லது அதன் தத்துவத்துக்கோ உடன்பாடற்ற கருத்துக்கள் என்று எவற்றையும் அதில் காண முடியாது. சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல திருக்குறளில் தெளிவாகத் தரப் பட்டுள்ளன. (இது குறித்த விரிவான விளக்கத்தை இந்நூலாசிரியரின் 'வள்ளுவம் வழங்கும் தமிழர் தத்துவம்' என்ற நூலில் காண்க.)

இத்தகைய காரணங்களால் திருக்குறளைச் சைவ நூலாகவும் திருவள்ளுவரைச் சைவ ஞானியாகவும் சைவ மக்கள் கருதுகின்றனர். தவத்திரு ஆறுமுக நாவலர் திருவள்ளுவரை "திருவள்ளுவ நாயனார்" என்று போற்றுகிறார். திருக்குறட் கருத்துக்களும் சொல்லாட்சிகளும் மெய்கண்ட சாத்திர நூல்களில் இடம் பெறுவதையும் காணலாம்.

**13. சைவ சித்தாந்த நூல்களில் அறுவகைச் சமயங்கள் பற்றிய குறிப்புக்கள் உண்டா? உண்டாயின் அவை காணபத்தியம் முதலிய அறு சமயங்கள் தொடர்பானவையா?**

அறுவகைச் சமயம், அறு சமயம், இருமுச் சமயம், ஐவகைச் சமயம் என்று சமயங்களை வகுத்துக் கூறுவதை தமிழ் இலக்கிய நூல்களில் காணலாம். தேவார திருவாசக

நூல்களிலும் அறுவகைச் சமயம் பற்றிப் பேசப்படுகிறது. சைவ சித்தாந்த நூலாகிய சிவஞான சித்தியாரில் "மெய்தரு சைவமாதி இரு மூன்று", "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்" என்ற தொடர்கள் வருகின்றன. பிற சித்தாந்த நூல்கள் சிலவற்றிலும் அறுவகைச் சமயம் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. இவை எல்லாம் அவைகள் காலத்திலிருந்த சமயங்களை ஆறாறு சமயங்கள் கொண்ட பிரிவுகளாகப் பிரித்து, அப்பிரிவுகளை அகச் சமயம், அகப் புறச் சமயம், புறச்சமயம், புறப்புறச் சமயம் போன்ற பெயர்களால் குறிப்பிடுகின்றன.

சைவம், வைணவம், சாக்தம், காணபத்தியம், கௌமாரம், சௌரம் ஆகிய ஆறும் மேற்காட்டப்பட்ட அறுவகைச் சமயப் பிரிவுகளில் இல்லாதவை; சைவத் தமிழ் நூல்களில் காணமுடியாதவை. இவற்றை அறுவகைச் சமயம் என்று சைவம் கொள்வதில்லை.

**14. சித்தாந்த நூல்களில் அளவை என்று கூறப்படுவது எது? விளக்குக.**

சமய தத்துவ நூல்களில் காணப்படும் அளவை என்பது ஒரு கொள்கையை உண்மையென்றோ பிழையென்றோ நிறுவுவதற்கு தேவைப்படும் கருவி எனலாம். *ஏகான்ம வாதம்* போன்ற சமயங்கள் அளவை ஆறு என்கின்றன. சைவசித்தாந்தம் காண்டல் அளவை, கருதல் அளவை, உரை அளவை என்ற மூன்றில் இவற்றை அடக்குகிறது.

கண்ணால் கண்டு அறிந்து உண்மை என நிறுவுதல் காண்டல் அளவை. புகையைக் கண்டு தீ இருக்கிறது என்று கருதல் போன்றவை கருதல் அளவை. ஞானிகள், அறிஞர், சான்றோரால் உரைக்கப்பட்டது உரை அளவை.

# 14. சில விளக்கங்கள்

**1. முருகனை அறுமுகச் சிவன் என்று கூறுதலுண்டு. இதன் விளக்கம் என்ன?**

சிவனுக்கு ஐந்து முகங்கள் உள்ளன. அவை தற்புருடம், அகோரம், சத்தியோசாதம், வாமதேவம், ஈசானம் என்பன. இவை முறையே கிழக்கு நோக்கிய முகம், தெற்கு நோக்கிய முகம், மேற்கு நோக்கிய முகம், வடக்கு நோக்கிய முகம், வடகிழக்கு நோக்கிய முகம் ஆகும். 'ஐந்து முகர் தந்தமுரு கேசநம' என்ற கந்தபுராணத் தொடர் சிவபெருமானை ஐந்து முகம் உள்ளவராகக் காட்டுகிறது. இந்த ஐந்து முகங்களுடன் அதோ முகம் என்று இன்னொரு முகமும் சிவனுக்கு உண்டு. இது கீழ் நோக்கிய முகம். ஐந்து முகத்துடன் அதோ முகமும் சேர்ந்து வந்த சிவவடிவமே முருகன் எனக் கொண்டு, அவனை அறுமுகச் சிவன் என்று கூறுதலுண்டு.

**2. சற்காரியவாதம் என்பது போல் விவர்த்தவாதம் என்றும் ஒன்று கூறப்படுகிறது. இது என்ன?**

உள்ளதே தோன்றும் என்பது சற்காரியவாதம். ('சத்'- காரியமாதல்). இது சைவ சித்தாந்தத்தில் ஒரு முக்கிய கொள்கை.

உள்ள ஒரு பொருள் மாறாமல் இருக்க, அது மாறிவிட்டதாகக் காணப்படுவது விவர்த்தவாதம். (விவர்த்தம் - விபரீதமானது). இது வேதாந்தத்தில் ஒரு முக்கிய கொள்கை. இதனை விளக்க வேதாந்திகள் பொதுவாகத் தரும் உதாரணம் பாம்பு - கயிறு பற்றியது. கயிறு பாம்பாக மாறாமல், பாம்பாகக் காணப்படுகிறது என்பது அவர்களின் உதாரணம்.

**3. சைவத்தில் ஆணவம் மூலமலமாகக் கொள்ளப் படுகிறது. கிறித்தவத்தில் மூலமான தீங்கு அல்லது பாவம் (original sin) பற்றிப் பேசப்படுகின்றது. இந்த இரண்டுக்கும் நெருங்கிய ஒற்றுமை உண்டென்று கருத முடியுமா?**

சைவத்தில் கூறப்படும் ஆணவம் உயிருடன் இயற்கையாகச் சேர்ந்து அனாதியாக இருக்கும் மூலமலம். கிறித்தவத்தில் பேசப்படும் மூலமான பாவம் ஆதியில் ஒருவர் செய்த பாவம் அல்லது தீச்செயலாகும். எப்பவோ ஒருவர் செய்த இந்தப் பாவத்தின் பலனைப் பின் வந்தவரும் இன்றிருப்பவரும் இனி வருபவரும் அனுபவிக்க நேரிடுகிறது என்ற கருத்தை சைவசித்தாந்தம் ஏற்பதில்லை. சைவசித்தாந்தம் ஒரு அறிவியல் தத்துவம். ஒருவர் செய்த செயலின் பலனை அவரே அனுபவிக்க வேண்டும் என்பது சைவத்தின் கொள்கை.

**4. முத்தியின் பின் உயிர் சிவானந்தத்தை நிரந்தரமாக அனுபவிக்கும் என்று சைவம் கூறுகிறது. உயிர் நிரந்தர சொர்க்கத்தை அனுபவிக்கும் என்று கிறித்தவம் கூறுகிறது. இந்த முடிநிலை அனுபவங்கள் இரண்டும் ஒன்றென்று கூறலாமா?**

நன்மை செய்தவர் அடைவது நிரந்தர சொர்க்கம் (eternal heaven), தீமை செய்தவர் அடைவது நிரந்தர நரகம் (eternalhell) என்ற கொள்கை கிறித்தவத்தில் காணக் கூடியது. சைவத்தில் சொர்க்கம் நரகம் என்பவை நிரந்தமானவையல்ல. சொர்க்கத்தில் இன்பத்தையும் நரகத்தில் துன்பத்தையும் அனுபவித்து முடிந்த பின் உயிர் மீண்டும் பிறப்பெடுக்கிறது. பாவம் செய்து நரகத்தில் விழுந்தாலும் உயிருக்கு விமோசனம் உண்டு; அது திருந்த வாய்ப்புண்டு என்பது சைவக் கொள்கை. இறுதியில் உயிர் அடையும் நித்திய சிவப்பேறு சொர்க்கம் அல்ல. சொர்க்கத்தை விட மிக உயர்ந்தது அது.



**5. சில சமயக் கொள்கைப்படி நாம் கடவுளிடமிருந்து பிரிந்து வந்து இந்த உலக வாழ்வை எடுத்தோம். இது குறித்த சைவ சித்தாந்த விளக்கம் என்ன?**

வேதாந்தம் போன்ற சில கொள்கைகளின்படி நாம் பிரமத்திலிருந்து பிரிந்து வந்தோம்; நாம் அதன் ஒரு கூறாக உள்ளோம்; எமது ஆன்மீக சாதனையால் நாம் மீண்டும் பிரமத்துடன் சேர்ந்து விடுவோம். (பிரமம் - கடவுள்; மேலான பொருள்). இது சைவ சித்தாந்தத்துக்கு உடன்பாடற்ற கொள்கை.

நாம் கடவுளிலிருந்து பிரிந்து வந்தோம், அதன் ஒரு கூறாக உள்ளோம் என்றால் எமக்கு கடவுளின் தன்மைகள் இருக்கவேண்டும்; அவை இல்லை. கடவுளிலிருந்து எம்மைப் பிரித்தது மாயை என்ற ஒரு பொருள் என்று கூறப்படுகிறது. (சைவ சித்தாந்தம் கூறும் மாயை வேறு). இதனை ஏற்றுக் கொண்டால் கடவுளைவிட மாயைக்கு ஆற்றல் அதிகம் என்றாகிறது. இது ஏற்கமுடியாதது. எமது ஆன்மீக சாதனையால் கடவுளுடன் சேர்ந்து ஒன்றாகி விடுவோம் என்றால், மீண்டும் பிரிந்து வரமாட்டோம் என்பது உறுதியல்ல. இத்தகைய காரணங்களால் நாம் கடவுளின் கூறு என்பதையும் கடவுளிடமிருந்து பிரிந்து வந்தோம் என்பதையும் சைவ சித்தாந்தம் ஏற்பதில்லை.

**6. சைவத் திருக்கோயில் அமைப்பு முறை மாயா காரியங்களாலான மனித உடம்பை ஒத்ததென்று கூறப்படுகிறது. இது குறித்த விளக்கமென்ன?**

சைவத் திருக்கோயில்கள் சைவ ஆகம விதிப்படி கட்டப்படுதல் மரபு. இது தொடர்பான ஆகம விதிமுறைகளை அறிந்து தெளிந்த சிவாசாரியாரியார், சிற்பக் கட்டிடக் கலைஞர், அறிஞர் ஆகியோரின் வழிகாட்டலில் கோயில்கள் அமைக்கப்படுதல் அவசியம்.

உடம்பில் உயிர் விளங்குதல் போன்று திருக்கோயிலில் இறைவன் விளங்குகிறான். இறைவன் அருள் சுரக்கும் இடம் கோயிலின் கர்ப்பக்கிரகம் அல்லது மூலஸ்தானம் எனப்படும் கருவறை. இது மனித உடம்பில் உள்ள தலை எனக்கொள்ளலாம். இது போல் அர்த்தமண்டபம் - கழுத்து, மகாமண்டபம் - மார்பு, யாகசாலை - நாபி, ஸ்தப மண்டபம் - தொடை அல்லது உடம்பின் கீழ்ப்பாகம், கோபுரம் - பாதம், எனக் கொள்வதுண்டு. இன்னொரு வகையாக, கோபுரம் - வாய், நந்தி - நாக்கு, கொடிமரம் - உள்நாக்கு, தீபங்கள் - இந்திரியங்கள், கருவறை - இதயம், சிவலிங்கம் - உயிர் என்று ஒப்பிடுதலுமுண்டு.

கருவறையின் மேலுள்ள விமானம் குறுகிக்குறுகி மேலே செல்வதைக் காணலாம். உயிர் உலகப் பற்றைச் சிறிது சிறிதாக விட்டு இறையருளை நாடி வளர்ந்து செல்ல வேண்டுமென்பதை இது உணர்த்துகிறது. விமானத்தின் மேலுள்ள குடம் போன்ற கலசம் திருவருள் வெளியில் ஆன்மா ஒன்றித் திளைப்பதை உணர்த்துகிறது. உற்சவமூர்த்தி பஞ்சலோகங்களால் செய்யப்பட்டது. இறைவனின் ஐந்தொழிலைக் குறிப்பது இந்த பஞ்சலோகங்கள். இறையருள் வெளிப்படும் இருப்பிடங்களான சிவ தத்துவங்கள் ஐந்தையும் குறிப்பனவாகவும் கொள்ளலாம்.



### 7. திருக்கோயில் வீதிகளின் அமைப்புக்கும் தத்துவ விளக்கம் உண்டா?

ஆன்மாவுக்கு ஐந்து வகையான உடம்புகள் (பஞ்சகோசங்கள்) உண்டென முன்பு படித்தோம். திருக்கோயில்களின் வீதிகள் ஐந்து, மூன்று, இரண்டு, ஒன்று என்ற எண்ணிக்கையில், கோயிலுக்கு ஏற்றதாக அமைந்திருக்கும்.

ஐந்து வீதிகள் உள்ள கோயிலில், அவை ஆன்மாவின் ஐந்து சரீரங்களையும (பஞ்ச கோசங்களையும்) குறிப்பன. ஐந்தாவதாக உள்ள வெளிவீதியிலும் பார்க்க அதன் உள்ளிருக்கும் நான்காவது வீதி (சுற்றளவு குறைந்து) குறுகியதாகி, தூல சரீரதிலும் பார்க்க சூக்கும சரீரம் நுண்மையானது என்பதை உணர்த்துகிறது. இவ்வாறே ஒவ்வொரு வீதியும் ஒவ்வொரு சரீரத்தின் நுண்மையை உணர்த்துவதாக உள்ளது.

மூன்று வீதிகள் கொண்ட கோயிலில், அவை தூல சரீரம், சூக்கும சரீரம், காரண சரீரம் ஆகியவற்றைக் குறிக்கும். ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் ஆகியவற்றைக் குறிப்பதாகவும் கூறுவதுண்டு. இவற்றை விட உயிர்களின் கேவலம், சகலம், சுத்தம் ஆகிய நிலைகளையும், ஆன்மா அடையும் பாசஞானம், பசுஞானம், பதி ஞானம் ஆகியவற்றைவும் குறிப்பதாகவும் கூறப்படுவதுண்டு.

இரண்டு வீதிகள் மட்டும் உள்ள கோயிலில், அவை ஆன்மாவின் தூல சரீரத்தையும் (அன்னமய கோசத்தையும்) சூக்கும சரீரத்தையும் (பிற கோசங்களையும்) குறிப்பன. ஒரு வீதி மட்டும் உள்ள கோயிலில், அது ஆன்மாவின் ஐந்து சரீரங்களையும் ஒரு சேரக்குறிக்கும்.

**8. நந்தி, பலி பீடம், கொடி மரம் ஆகியவை குறித்த விளக்கம் என்ன?**

திருக்கோயிலில் உள்ள மூலமூர்த்தி, நந்தி, பலிபீடம் ஆகியவை முறையே, பதி, பசு, பாசத்தைக் குறிப்பன. நந்திதேவர் பாசம் நீங்கி உயர்ந்த ஆன்மாவைக் குறிக்கும். அவர் இறைவனை நோக்கியபடி இறை சிந்தனையில் இருப்பவர். கோயிலுக்குச் சென்று கும்பிடும் போது எமது பாசம் நீங்குவதைப் பலிபீடமும், இறைவனை அடைதலே நாம் கடைப்பிடிக்க வேண்டிய அறம் என்பதை நந்தியும், அவனை வழிபட்டுச் சிவப்பேறு பெறவேண்டும் என்பதை மூலமூர்த்தியும் உணர்த்துகின்றன.

கொடிமரத்தில் கொடிமரம் பதியையும், கொடிச் சீலை பசுவையும், தர்ப்பைக் கயிறு பாசத்தையும் குறிப்பன. ஆன்மா பாசத்தில் நீங்கி, இறையருளால் மேல் நிலையான வீடு அடைவதைக் குறிப்பது கொடியேற்றம். கொடி மரத்தில், சமதூர இடைவெளியில், ஆறு வட்ட வடிவான முடிச்சுக்கள் உள்ளன. இவை உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களைக் குறிப்பன. இந்த ஆதாரங்கள் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன. இந்த ஆறு ஆதாரங்கள் வழியாகக் குண்டலினி சக்தியை எழுப்பி இறைவனுடன் ஒன்றும் யோக நெறியையும் கொடி மரம் உணர்த்துகிறது என்பர்.

**9. திருக்கோயிலில் இடம்பெறும் திருவிழாக குறித்த விளக்கம் என்ன?**

கொடியேற்றம் பற்றி மேலே விளக்கப்பட்டது. திருவிழா நாட்களில் இறைவன் பல வாகனங்களில் அமர்ந்து வீதி வலம் வந்து அருள் புரிகிறான். எல்லா



உயிர்களிலும் இறைவன் உடனிருந்து அருள்புரிவதை இது குறிக்கிறது.

பெரிய சில்லுகள் கொண்ட அடிப்பாகத்தை உடையது தேர். அதன் சுற்றதளவு மேல் நோக்கிக் குறைந்து கொண்டு போகும். அடிப்பாகம் நாம் வாழும் உலகத்தையும், உயிரின் கேவல நிலையையும் குறிக்கும். பிறவிகள் எடுக்குமுன் உயிர் ஆணவத்துடன் சேர்ந்திருந்த நிலை கேவலநிலை. பிறவிகள் எடுத்து தத்துவங்களுடன் சேர்ந்திருக்கும் நிலை சகலநிலை. பாசத்திலிருந்து நீங்கிய நிலை சுத்த நிலை. அலங்கரிக்கப்பட்ட தேரின் நடுப் பாகத்தில் இறைவன் எழுந்தருளும் பீடம் இருக்கிறது. இது சகல நிலையைக் குறிக்கும். இந்நிலையில் உள்ள ஆன்மாக்களாகிய நாம் இறைவனை வழிபட்டு உய்ய வேண்டும் என்பதை தேரின் நடுப்பாகம் குறிக்கின்றது. தேரின் மேற்பாகம் சிவப்பு, வெள்ளை நிறச் சேலைகளால் மாறி மாறி ஐந்து வட்டங்களாகச் சுற்றப்பட்டு ஒடுங்கிச் செல்லும். இது சிவ தத்துவங்கள் ஐந்தையும், ஆன்மாவின் சுத்த நிலையையும குறிப்பது. மேலே இருக்கும் முடி அல்லது கலசம் முத்தி நிலையைக் குறிப்பது. தேர் என்ற சொல்லே உலக வாழ்வைத் தேர்ந்து இறைவனை அறிதல் என்ற பொருளைத் தருகிறது.

தேரின் பின் வரும் தீர்த்தம் சிவனருளாகிய நீரில் குளித்து உயிர் இறையின்பத்தை அனுபவிப்பதை உணர்த்துகிறது. ஆன்மாவின் மலங்கள் நீங்கி சத்திநி பாதம் (இறையருள் வீழ்ச்சி) உண்டாவதையும் குறிப்பது தீர்த்தத் திருவிழா.

**Books by the author**

**ஆசிரியரின் நூல்கள்**

1. சைவசித்தாந்த வினா விடை
2. சைவத்தை அறியுங்கள்
3. சிவபுராணம் விளக்கவுரை
4. வள்ளுவம் வழங்கும் தமிழர் தத்துவம்
5. தத்துவ உலகில் தடம்பதித்த பண்டிதர் மு.கந்தையா
6. உயர்வுமிகு சைவசமயம் உடன்பாடற்ற வழிபாடு
(பிற அறிஞரின் கட்டுரைகளின் தொகுப்பு)
7. Understanding Saiva Siddhanta Philosophy.
8. An Outline of Saivism
9. கற்பக விநாயகன் கவிமலர்
10. உணர்வுக் கோலம் (*கவிதைகள்*)
11. எண்ணக்கோலம் (*கவிதைகள்*)

**Books Published: பதிப்பித்த நூல்கள்:**

12. காசிவாசி செந்திநாதையர்
(பல அறிஞரின் கட்டுரைத் தொகுப்பு)
13. நாவலர் வழியில் தமிழ் அறிஞர்
(ஆசிரியை: யோகேஸ்வரி கணேசலிங்கம்)
14. யாவரும் கேளிர் (சிறுகதைத் தொகுப்பு)
(ஆசிரியை: யோகேஸ்வரி கணேசலிங்கம்)

*Dr.K. Ganesalingam,*
*54 - 5/4 St. Lawrance Road*
*Colombo-06, Sri Lanka.*
*E-mail: < kganesalingam@yahoo.com >*

## சைவசித்தாந்த வினா விடை

*சித்தாந்தரத்தினம்*
*கலாநிதி க. கணேசலிங்கம்*

...எளிய நடையில் அமைந்துள்ள வினா-விடைகள் முப்பொருள் இயல்புகளைத் தெளிவுற விளக்குகின்றன. சில விரிவான விளக்கங்கள் சைவம் கற்றவர்கள் மேலும் தமது அறிவைப் பெருக்கிக் கொள்ள உதவும் முகமாக விளங்குகின்றன. கொள்கை விளக்கம் மட்டுமல்லாது சிவாலயம், சிவமூர்த்தங்கள் பற்றிய விளக்கம் தந்து, வழிபாட்டு நெறியினையும் வலியுறுத்தி இருப்பது சித்தாந்தம் கற்றதனால் பெறத்தக்க பயனுக்கு வழிகாட்டியாய் இருக்கின்றது.

-குருமகாசன்னிதானம்,
திருவாவடுதுறை ஆதீனம்

...ஈழத்தில் நாவலருக்குப் பின் தொடர்ந்த சைவ சித்தாந்தச் சிந்தனையாளர்களில் இன்று சித்தாந்தரத்தினம் கலாநிதி க.கணேசலிங்கம் அவர்களும் இடம் பெறுகின்றார்கள். இப்பெருமகனார் சைவம், சித்தாந்தம் தொடர்பாகப் பல கட்டுரைகளும் நூல்களும் படைத்துள்ளார்கள். அந்த வரிசையில் வெளிவரும் இந்நூலும் முக்கிய இடத்தைப் பெறுகிறது.

-யோகானந்த அடிகள்
இலண்டன் மெய்கண்டார் ஆதீனம்

ISBN: 955-99208-04